# இன்று என்னிடம் நிறைய பணம் இருக்கிறது!

நான் ஒவ்வொரு மாதமும் சிறிய தொகைதான் யுகோ பாங்க் ரெக்கரிங் டெபாஸிட் திட்டப்படி சேமித்து வந்தேன். இன்று எனக்கு இந்த ரொக்கத்தொகை கிடைத்திருக்கிறது.

மாதத்தவணையில் குறைந்த பட்சம் செலுத்தும் தொகை ரூ 10/- அதிக பட்சம் ரூ 450/- இந்த ரெக்கரிங் டெபாஸிட் அக்கௌண்டினை ஒருவரோ அல்லது கூட்டாகவோ தொடங்கலாம்.




தலைமை ஆபீஸ் : கல்கத்தா

நீங்கள் பணம் சேமிக்கலர்ம், யுகோ பாங்க் உங்களுக்கு உதவி செய்ய முடியும்

ASP/UCO-10/68




# ஆப்கன் ஸ்னோ அழகு சாதனங்கள்
# எல்லா வயதினருக்கும் மிகச் சிறந்தது

சத்து மிகுந்த மூலப்பொருள்களால் விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட ஆப்கன் ஸ்னோ, மேனியை இயற்கையாகவே மழமழப்பாகவும் சுருக்கம் விழாமலும் பாதுகாக்கிறது. உங்கள் மேனி மிருதுவாகவும், பிரகாச மாகவும் இருக்க உதவுகிறது. நாள் முழுதும் நீடித்த அழகுடன் இருப்பதோடு மேனி இயற்கையான பொலிவோடு விளங்குகிறது.

ஆப்கன் முகப் பவுடர், கிரீம், லிப்ஸ்டிக் உங்களுக்குப் பிடித்தமான கலர்களில் கிடைக்கும். ஆப்கன் நகப் பாலிஷ் உங்கள் கைகளுக்கு ஒரு புதிய அழகை உண்டாக்குகிறது.

## ஆப்கன் ஸ்னோ அழகு சாதனங்கள்



ஈ. எஸ். படான்வாலா, பம்பாய்-77 (இந்தியா)

# பொறுங்கள்!

## துணிகள்
## சீக்கிரமே உடுக்க
## தகுதியற்றதாய்
## போவதைப்பற்றி
## கவலைப்படுகிறீர்களா?

கவலையை விடுங்கள். டுவின் டஸ்கர் துணிகளை வாங்குங்கள். இந்த ரக துணிகள் உங்களுக்குப் பிடிக்கும் ... உறுதியானவை, நீடித்து உழைப்பவை. அதி நேர்த்தியாய் தயாரிக்கப்பட்டவை. விலையிலும் நயமானவை. இவை எல்லாம் மதுரை மில்ஸாரின் பெரிய அளவு உற்பத்தி சௌகரியங்களால் சாத்தியமாகின்றன. ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்—டுவின் டஸ்கர். நயமான விலையில் தரமுள்ள துணிகள்.

**ஹார்வி**



# டுவின் டஸ்கர்

**துணிமணிகள்**

## நயமான விலையில் தரமுள்ளவை

**மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்,**
**மதுரை.**

**மானேஜிங் ஏஜண்டுகள்:**
**ஏ. & எப். ஹார்வி லிமிடெட்**



# கல்கி பொருளடக்கம்

கீலக வைகாசி 13 :: மே 26



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

← பட விளக்கம் 12ம் பக்கம்


புதுக்
கடன்கள்
$
ஆனால்
நன்றி மட்டும்
எதிர்பார்க்காதீர்கள்
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 27 □ இதழ் 43



# கம்பெனி நன்கொடை மசோதா

அரசியல் கட்சிகளுக்குக் கம்பெனிகள் நன்கொடை அளிப்பதைத் தடுக்கக் காங்கிரஸ் அரசாங்கம் இப்போது லோக சபையில் கொண்டுவரவிருக்கும் மசோதா மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது சரியானதாகத் தோன்றலாம். ஆனால் அரசாங்கத்தின் எந்த ஒரு நடவடிக்கையையும் அது எந்தச் சந்தர்ப்பச் சூழ்நிலையில் மேற்கொள்ளப்படுகிறது என்பதை ஆராய்ந்து பார்த்து மதிப்பிடவேண்டும்.

இதுபற்றி இந்தியன் எக்ஸ்பிரஸ் கூறுவது கவனத்துக்குரியது. ''சந்தானம் கமிஷன், கட்சிகளுக்குக் கம்பெனி நன்கொடைகளைத் தடை செய்ய வேண்டும் என்ற முடிவுக்கு வருவதற்கு நீண்ட காலம் முன்பே எதிர்க்கட்சிகள் பாராளுமன்றத்தில் இதே கருத்தை வலியுறுத்தின. அப்போது அதைப் பலமாக எதிர்த்த அதே காங்கிரஸ் இப்போது இம் மசோதாவைக் கொண்டுவருவானேன்? 1962 தேர்தலின்போது கம்பெனி நன்கொடைகளால் பெருவாரியான ஆதாயம் அடைந்தது காங்கிரஸ் கட்சியே. 1962 தேர்தலுக்குப் பிறகு காங்கிரஸ் பலவீனமுற்றிருப்பதையும் ஜனசங்கம், சுதந்திரா கட்சிகளின் செல்வாக்கு பெருகி வருவதையும் கண்ட கம்பெனிகள் நன்கொடைகளைக் காங்கிரஸ் அல்லாத கட்சிகளுக்கும் கொடுக்க ஆரம்பித்தன. சோஷலிஸக் கொள்கையைக் கடைப்பிடிக்கும் காங்கிரஸ், தனக்கு எதிர்காலத்தில் கம்பெனி நன்கொடைகள் கிடைப்பது சந்தேகம் என்பதால் இப்போது இம் மசோதாவைக் கொண்டு வருகிறதா?''

இந்த விதமாக எழுதியிருக்கிறது இந்தியன் எக்ஸ்பிரஸ்.

எதிர்க் கட்சிகளுக்குக் கம்பெனிகளின் நிதி உதவி கிடைக்க வொட்டாமல் செய்துவிட்டு, பெர்மிட் - லைசென்ஸ் கொள்கை மூலம் காங்கிரஸுக்கு மட்டும் கம்பெனிகள் மீது ஆதிக்கம் இருந்து கொண்டிருப்பது ஆட்சேபத்துக்குரியது.

கம்பெனிகள் கட்சிகளுக்கு நன்கொடைகள் அளிப்பதால் ஏற்படும் ஒழுங்கீனங்களைத் தடுக்கவே மசோதா தேவைப்படுகிறது என்று இதன் பூர்வாங்க வாசகங்கள் கூறுகின்றன.

இது ஒரு பக்கம் இருக்க அச்சுறுத்தல்கள்மூலம் ஆளும் கட்சி எப்படியெல்லாம் கம்பெனிகளிடமிருந்து பணம் பறிக்கலாம் என்பதைச் சென்ற பல தேர்தல்கள் தெளிவாக உணர்த்தி, கம்பெனிகள் அளிக்கும் நன்கொடைகளை வழிப்பறிக் கொள்ளையாகவே கருத இடம் அளித்தன. கொள்ளைக்காரன் வழிப்பறிக்குட்பட்டவர்களிடம் கருணை காட்ட வேண்டுமென்ற அவசியமில்லை. சில சந்தர்ப்பங்களில் நிதி உதவி செய்த தனி நபர் அல்லது கம்பெனிகளுக்குக் கெடுதல்களைக்கூடச் செய்து அதன்மூலம் ஆளும் கட்சி தனது 'நேர்மை'யை நிரூபிக்க முயன்றிருக்கக் கூடும். இதனால் அச்சுறுத்தல் மூலம் நிதி வசூலிப்பதிலுள்ள நெறிகெட்ட தன்மை எள்ளளவும் மாறி விடாது.

உடனடியாகச் செய்ய வேண்டிய சரியான காரியம் கட்சிகளுக்கும் கட்சி வேட்பாளர்களுக்கும் இப்போது ஆகும் தேர்தல் செலவைக் குறைப்பதற்கான முழு முயற்சியை எல்லா வகையிலும் மேற்கொள்வதுதான். தானே ஏற்றுக் கொள்ளக் கூடிய எல்லாத் தேர்தல் நடவடிக்கைகளையும், அதற்கான செலவுகளையும் அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டும். அந்த அளவுக்குக் கட்சிகளுக்கும், அபேட்சகர்களுக்கும் சுமையைக் குறைக்க வேண்டும். இதற்கு எதிராகக் கூறப்படும் ஆட்சேபங்களையெல்லாம் பொருட்படுத்தாமல் உதறித் தள்ளிவிட வேண்டும். சங்கல்பம் உறுதியாக இருந்தால் காரியத்தைச் சாதிப்பது கஷ்டமல்ல.

எல்லாவற்றையும்விட மிக முக்கியமானது இப்போது மத்திய அரசாங்கம் நேரடியாகவும், ராஜ்ய அரசாங்கங்கள் மறைமுகமாகவும் கம்பெனிகள் மீது ஆதிக்கம் செலுத்துவதற்குச் சாதகமாக உள்ள பெர்மிட் — லைசென்ஸ் முறையை அரசியல் சார்பற்ற ஒரு சுயேச்சை ஸ்தாபனத்திடம் ஒப்படைக்க

வேண்டும். இந்த மாற்றம் மிக மிக அவசிய மானது. எந்தக் காரணத்தைக் காட்டியும் இதை ஒத்திப்போடவோ, தவிர்க்கவோ கூடாது. நியாயமாகப் பார்க்கப்போனால் இந்த மாற்றத்தை முதலில் செய்து விட்டு, பின்னரே கம்பெனி நன்கொடைகளைத் தடை செய்யும் மசோதாவைப் பாராளுமன்றத்தில் ஷரத்துவாரியாக விவாதத்துக்கு எடுத்துக் கொள்ள வேண்டும்.

எதிர்க்கட்சிகள் இவ்விரு நடவடிக்கைகளை யும் வற்புறுத்தவில்லையானால் நமது நாடு ஓர் அடிமை நாடாக மாறிவிடும். ஒரே கட்சி ஆட்சியிலிருந்து செலுத்தும் ஏகாதிபத்திய அதிகாரத்தின் கீழ் பாட்டாளி மக்களானாலும் இதர உழைப்பாளர்களானாலும், எல்லோருமே அரசாங்கச் சேவகர்களாக மாறி, அரசாங்க உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்து செயல்பட வேண்டிய நிலை பாரதத்தில் உருவாகிவிடும்.

# என்ன சேதி?

## ஆசிரியர் கடமை

பாளையங்கோட்டை செயின்ட் ஜான் உயர்நிலைப்பள்ளியில் ஓர் அநாவசியமான நிகழ்ச்சி ஏற்பட்டுள்ளது. இவ்வருட இறுதிப் பரீட்சையில் எட்டாவது வகுப்பு மாணவர்களுக்குத் தமிழ்-2 கேள்வித்தாளில் ஒரு நீளமான தமிழ் வசனப் பகுதியைக் கொடுத்துவிட்டு அதன் கருத்தை மூன்றில் ஒரு பங்குக்கு மேற்படாமல் சுருக்கித் தர வேண்டும் என்று சொல்லியிருந்தார்கள். அப்படிக் கொடுக்கப்பட்ட பகுதி, சிராத்தச் சடங்கைப் பழித்துக் கூறுவதாக உள்ளது. இது திருநெல்வேலியிலுள்ள பெருவாரியான ஹிந்துக்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தியிருக்கிறது. இந்த விஷயத்தைச் சர்க்கார் கல்வி இலாகாவுக்கும் திருநெல்வேலி பிஷப்புக்கும் தெரிவித்துத் தங்கள் எதிர்ப்பைக் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். [பள்ளித் தலைமை ஆசிரியர் வருத்தம் தெரிவித்திருப்பதாகச் செய்தி வெளியாகியிருக்கிறது].

எல்லாச் சமயங்களிலும் பிற மதத்தினருக்குப் புரியாத சடங்குகள் பழக்கவழக்கங்கள் இருக்கலாம். அதைப் புரிந்து கொள்ள முயல வேண்டுமே தவிர்த்து, பழித்துப் பேசியும், எழுதியும் அச்சடங்குகளைப் பின்பற்றுவோர் மனத்தைப் புண்படுத்தலாகாது. வேறு யார், எங்கு இத்தகைய செயல்களில் ஈடுபட்டாலும் பள்ளிக்கூடங்களில் இத்தகைய செயல்களில் ஈடுபடவே கூடாது. சிறுவர்களின் மனத்தில் எல்லாச் சமயங்களிடத்தும் சமமான பற்றும் பக்தியும் வளரச் செய்வதே பள்ளிக்கூட ஆசிரியர்களின் கடமையாகும்!

நமது அரசியல் சாஸனம் எல்லா மதத்தினரையும் சமமாக மதிக்கும் சாஸனமாகும்.

## வெறி விழித்திருக்கிறது: தறி தூங்குகிறது

தமிழகக் கைத்தறி ஆடைகள் வடநாட்டு நீர்திப் பிரதேச மார்க்கெட்டை இழந்து பெருவாரியான துணி தேங்கிக் கிடப்பதாகக் கூறப்படுகிறது. இதற்குக் காரணம் வடநாட்டுக்காரர்கள், கைத்தறித் துணிக்கான ''இன்வாய்ஸ்'' முதலியவை ஹிந்தியில் எழுதப்பட வேண்டும் என்று வற்புறுத்துவதுதான் என்று தெரிகிறது. இதுகாறும் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட 'இன்வாய்ஸை' அங்கீகரித்தவர்கள் இப்பொழுது இப்படி மனம் மாறியிருக்கிறார்கள்.

மொழி விஷயத்தில் தமிழகத்தின் நிலையை வடநாட்டு மக்கள் சரியாகப் புரிந்து கொள்ளாததே இந்தக் குளறுபடிக்குக் காரணம். மத்திய ஆட்சியில்தான் ஹிந்தி வேண்டாம், ஆங்கிலமே தொடர்ந்திருக்கட்டும் என்று சொல்கிறோமே தவிர, அவர்கள் ராஜ்யத்தில் ஹிந்தி ஆட்சி மொழியாவதை நாம் ஆட்சேபிக்கவில்லை.

குறுகிய மொழி வெறி உச்ச கட்டத்தை அடைந்து விட்டால் தேச நலன் எது என்பது கூடத் தெரியாமல் போகிறது என்பதற்கு இந்தக் கைத்தறி விவகாரம் நல்ல உதாரணம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

சர்க்கார் துறையில் உள்ள எழுபத்தேழு நிறுவனங்கள் 66–67ம் ஆண்டில் ரூ. 22.36 கோடி நஷ்டம் அடைந்திருக்கின்றன. நீண்ட காலக் கடனாகவும் பங்குகளாகவும் இந்த எழுபத்தேழு நிறுவனங்களில் முடக்கப்பட்டிருக்கும் மூலதனம் ரூ. 2,841 கோடி! தனியார் துறை நிறுவனங்களில் ஏதாகிலும் இப்படிப்பட்ட நஷ்டத்தைக் காண்பித்தால் அடுத்த விநாடியே பங்குதாரர்களின் கண்டனத்தைப் பெற்றிருக்கும். ஆனால் இந்தியாவில் உள்ள சர்க்கார் துறை நிறுவனங்கள் சோஷலிஸம் என்ற பெயர் கொண்ட, குண்டு புகாத கவசம் அணிந்துள்ளன. இந்தக் கவசத்தைக் காட்டி மக்கள் ஏமாற்றப்படுகிறார்கள்.

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத் தானும்தன்
பொல்லாச் சிறகை விரித்தாடினாற் போல

என்ற அவ்வையாரின் பாடல் நமது சர்க்கார் நஷ்டப் பொருளாதாரத்தைப் பார்த்துக் காப்பி அடித்துச் சர்வநாசத்தைத் தேடுவதை வர்ணிக்கப் பொருந்தும்.

ஃஃஃ

அமெரிக்கத் துருப்புக்கள் தென்வியட்நாமிலிருந்து வெளியேறிவிட வேண்டும் என்று 'ஸ்டேட்ஸ்மன்' ஒரு சமயம் கூறி வந்தது. இவ்விஷயத்தில் பாரத சர்க்காரைவிட அதிகமாகவே 'நியூ ஸ்டேட்ஸ்மன்' தீவிரமாக இருந்தது. ஆனால் சமீப காலத்தில் அப்பத்திரிகை இந்தக் கொள்கையை மாற்றிக் கொண்டு விட்டது. இதை 'மைனஸ்டியா'வின் இவ்வார இதழ் எடுத்துக் காட்டுகிறது.

சமாதானம் ஏற்பட்டு, உடன்படிக்கையின் அம்சங்கள் என்னவாக இருப்பினும்

அவை அமெரிக்கத் துருப்புக்களின் வெளியேற்றத்தில் முடிவுமானால் அது பெரிய விபரீதமே என்பது 'நியூ ஸ்டேட்ஸ்மன்'னின் இன்றையக் கொள்கை. ஒன்றன்பின் ஒன்றாக தென்கிழக்கு ஆசியாவில் உள்ள எல்லா நாடுகளும் கம்யூனிஸ்டுகளின் கரங்களில் சிக்கிவிடும். இதைத்தான் துங்கு அப்துல் ரஹ்மான், "நம் அனைவரது முடிவாகவும் இருக்கும்" என்றார்.

* * *

ஓர் அமெரிக்கப் பத்திரிகையாளர் மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதற்கான காரணங்களை ஆராய்கையில் மார்க்கெட்டில் விற்பனைக்கு வரும் பொருள்கள் எண்ணிக்கையிலும் தரத்திலும் உயர்ந்திருப்பதையும் இதன் விளைவாக வேலை வாய்ப்புக்கள் பெருகுவதையும் கூறுகிறார்.

ஆனால் அதே சமயத்தில் இங்கு நாம் அனுபவிப்பது, சிந்தனையற்ற வேலை நிறுத்தத்தால் ஏற்படும் நஷ்டம்; அரசியல் ரீதியிலும் பொருளாதார ரீதியிலும் சுதந்திரத்துக்குக் கட்டுப்பாடுகள் ஆகியவற்றைத்தான்.

அமெரிக்கப் பத்திரிகையாளர் வர்ணிக்கும் அளவுக்கு முன்னேற்றத்தை நாம் இங்கு அடைந்துவிடவில்லை. ஆனால் இருள் படர்ந்த பகுதிகள் நமது வாழ்வில் உரிய அளவுக்கு இருப்பதைக் காண்கிறோம்.

ஒரு நல்ல முடிவை அடையப் பல அடிப்படை அம்சங்கள் தேவை. அந்த அம்சங்கள் ஒவ்வொன்றிலும் மனித உணர்ச்சிகளும் விருப்பு வெறுப்புக்களும் பிரிக்க முடியாதபடி இணைந்திருக்கின்றன. ஆனால் பொறுமை, நிதானம் இவற்றை உணர்த்தக்கூடிய ஞானம் எல்லா சமயங்களிலும் கிடைத்து விடுவதில்லை. முன்னேற வேண்டும் என்று விழிக்கப் பட்டுள்ள தேசங்கள் இந்த ஞானத்தை அனுக்கிரகமாக அடைகின்றன. மற்றவை இது இல்லாததால் முன்னேறுவதில்லை.

* * *

காஞ்சிபுரத்தில் சமீபத்தில் நடைபெற்ற பாராட்டு விழாவில் முதலமைச்சர் பதில் அளிக்கையில் கூறியது கவனத்துக்குரியது. இந்த நாட்டில் அரசியல்வாதிகளுக்கு மிக அதிகமான முக்கியத்துவம் தரப்படுகிறது என்ற அவர், தொழிலதிபர்கள், டாக்டர்கள், பொறி இயல் நிபுணர்கள் இன்னும் மற்ற தொழில்களில் ஈடுபட்டிருக்கும் அறிஞர்கள் ஆகியோர் வெறும் அரசியல்வாதிகளை விட அதிகமான போற்றுதலுக்கு உள்ளாக வேண்டும் என்று வற்புறுத்தியிருக்கிறார்.

* * *

பார்க்கின்ஸன் என்பவருடைய புத்தகத்தை விமர்சனம் செய்யும் ராபர்ட் தார்ன்டன், ராபர்ட் டாப்ட் கூறிய பொன்மொழிகளை நினைவுபடுத்துகிறார்: "நமது சமுதாயத்தின் செயல்முறை வெற்றி பெற்றது என்று தீர்மானிப்பதற்கு வாழ்க்கைத் தரத்தில் உயர்ந்த மக்களை மட்டும் உருவாக்கினால் போதாது; மிக உயர்தரமான குண இயல்புகளைக் கொண்ட மக்களை உருவாக்க வேண்டும். தெய்வபக்தி, ஒழுக்கம், கல்வி அறிவுடன்கூடிய சாமர்த்தியம், சுயகட்டுப்பாடு, நீதி கோரும் தன்மை, சுயநலமற்ற மனம் ஆகிய குணங்கள் அவர்களிடம் பொருந்தியிருக்க வேண்டும். 'உயர்ந்த வாழ்க்கைத் தரம்' என்ற கடவுளுக்குப் பூஜை போடுவதால் மட்டும் நாம் கதிமோட்சம் அடைந்துவிட முடியாது."

* * *

அதிகமான வேலைப் பளுவைச் சுமக்கும் தபால் தந்தி ஊழியர்கள் மே 15ந் தேதி முதல் தபால் தந்தி கட்டணங்கள் உயர்ந்துள்ளதற்கு நிதிமந்திரிக்கு நன்றி செலுத்துவார்கள். இனி அவர்களது வேலைச் சுமை கணிசமாகக் குறையும்.

நிதி இலாக்காவில் அடுத்தாற்போல் யோசனை பண்ண வேண்டிய விஷயம், வீடுகளில் உள்ள ஜன்னல்களின் மீது அவற்றின் எண்ணிக்கை அடிப்படையில் மத்திய அரசினர் ஒரு வரி விதிக்கலாமா என்பது பற்றித்தான். இது நாம் சுவாசிக்கும் காற்றுக்கு வரி விதிப்பதாகும். ஆனால் என்ன? அரசினருக்குப் பணம் தேவைப்படுகிறதே!

## காமகோடியின் கருணைமொழி



நாம் எத்தனையோ காரியங்களைச் செய்து வருகிறோம். என்றாலும் நாம் செய்கிறோம் என்ற அகம்பாவம் நமக்கு வருவதற்குக் கொஞ்சம்கூட இடமில்லை. சிலர் அகம்பாவம் இல்லாத உயர்ந்த குணம் உடையவர்களாக இருக்கலாம். என்றாலும் 'நமக்கு அகம்பாவம் இல்லை' என்று அவர்கள் நினைத்தால் அதிலிருந்தே ஓர் அகம்பாவம் வந்துவிடும். ஆகையால் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

நாம் அகம்பாவப்படுவதற்கு இடமே இல்லை என்பது தான் உண்மை. எதைச் செய்ய வேண்டுமானாலும் சக்தி வேண்டும். சக்திதான் அம்பாள். அம்பாள் என்பது பெரிய சக்தி சமுத்திரம். அந்தச் சமுத்திரத்தில் ஒரு திவலைதான் நம்முடைய சக்தி எல்லாம். அவளுடைய ஒரு சிறு துளி அநுக்கிரக விசேஷத்தால்தான் இத்தனை பேசுகிறோம்; இத்தனை காரியங்களைச் செய்கிறோம். இந்த உண்மை தெரிந்தால் அகம்பாவத்துக்குக் கொஞ்சம்கூட இடமே இல்லை என்று உணரலாம்.

அமரர் **கல்கி**

படைத்த
அற்புதமான
வரலாற்றுக் காவியம்



# பொன்னியின் செல்வன்

**கல்கி**யில்

விரைவில்

ஆரம்பமாகிறது



# கண்டார், வெற்றி கொண்டார்

மவுண்ட் ரோட்டின் ஆரவாரத்திலிருந்து சற்று ஒதுங்கித் தேனாம்பேட்டையில் 'நிலா' என்ற அழகான பெயர் கொண்ட குளுமையான இல்லம் ஒன்றிருக்கிறது. இதுதான் முதலமைச்சர் அண்ணாதுரையின் காரியதரிசி திரு சொக்கலிங்கம் ஐ. ஏ. எஸ். வசிக்கும் வீடு. வெய்யிலின் உக்கிரம் தெரியாமல் நிழல் பரப்பும் மரங்கள், வரவேற்பறையில் ஜிலுஜிலுவென்று வீசும் காற்று, திரைச் சீலைகள் அசைந்தாடும்போது அவற்றின் அடியில் கட்டித் தொங்கவிட்டிருக்கும் சிறு மணிகள் கிண்கிணி ஓசை எழுப்பும் இனிய சூழ்நிலை.

''அண்ணா அவர்களின் சுற்றுப் பயணம் பற்றி உங்களிடம் பேச வந்திருக்கிறோம்'' என்றதுமே, திரு சொக்கலிங்கம் விநாடிப் போதும் வீணாக்காமல் சென்ற இடங்களைக் குறித்துச் சொல்ல ஆரம்பித்தார்.

''முதலில் விமானம் தரை தட்டியது பஹ்ரானில். அப்போது அங்கு இரவு இரண்டு மணி. அந்த அகால நேரத்திலும் நூற்றுக் கணக்கான தமிழர் குடும்பங்கள் அண்ணாவைச் சந்திக்கக் குழந்தை குட்டிகளுடன் பனியில் நின்று கொண்டிருந்தன. தமிழர்கள் எங்கிருந்தாலும் அண்ணாவைக் குறித்து எவ்வளவு நெருக்கமான ஓர் உணர்வைக் கொண்டிருக்கிறார்கள் என்பதை நன்றாக அறிந்திருந்த எனக்கே இந்தக் காட்சி இதயத்தைத் தொடுவதாக இருந்தது.''

''அவர்களுடன் ஓர் அரை மணி நேரம் பேச அவகாசம் கிடைத்திருக்கும். அடுத்தாற்போல் ரோமுக்குப் பறந்திருப்பீர்கள்.''

''ஆமாம்; அங்கு பார்த்து ரசிக்க வேண்டிய காட்சிகளையெல்லாம் பார்த்துவிட்டுப் போப்பாண்டவரைத் தரிசிக்கச் சென்றோம். அண்ணா அவருக்குத் திருக்குறளைப் பரிசாக அளித்தார். போப்பாண்டவர் மிக எளிய முறையில் இனிமையாகப் பழகினார்கள். பாரத நாட்டுக்குத் தம்மால் ஆகக் கூடிய உதவி ஏதேனும் இருக்கிறதா என்று கேட்டார்கள்.

''இந்தச் சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக் கொண்டு அண்ணா, போர்ச்சுகீசிய சிறையில் வாடும் இரு கோவா சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு விடுதலை வாங்கித் தர போப்பாண்டவர் தமது செல்வாக்கைப் பயன்படுத்த வேண்டும் என்ற கோரிக்கையைச் சமர்ப்பித்தார். போப்பாண்டவர் அண்ணாவின் வேண்டுகோளை மனத்தில் கொண்டு தம்மால் இயன்றதைச் செய்வதாக வாக்களித்தார். தமது பரிவாரங்களையெல்லாம் அனுப்பிவிட்டு போப்பாண்டவர் தமிழக அறிஞருடன் தனித்து அளவளாவினார். பூஜ்ய ஜெரோம் டிசோசாவும் நானும் மட்டுமேதான் உடன் இருந்தோம்.''

''பாரிஸில் உன்னதமான கலைப் படைப்புக்கள் அண்ணாவின் கலை உள்ளத்தைக்

ரோமில் போப்பாண்டவரைத் தமிழக முதன் மந்திரி அண்ணாதுரை சந்தித்தார். போப்பாண்டவர் தமிழ்ப் பண்பாட்டு முறைப்படி வரவேற்கிறார். அருகே ஜெரோம் டிசௌஸா, காரியதரிசி சொக்கலிங்கம்.

அட்டைப்படம்: அமெரிக்கர் ஒருவர் சுட்டிக் காட்டும் காட்சியைக் கூர்ந்து கவனிக்கிறார் அறிஞர் அண்ணா. டிஸ்னி உலகில் எடுத்த வண்ணப்படம்.



அமெரிக்காவில் வாழும் தமிழ்க் குடும்பத்தினரோடு தமிழக முதல்வர் உரையாடுகிறார்.

கவர்ந்திருக்கும்; அங்கு தொழிற்சாலைகள் ஏதேனும் பார்த்தீர்களா?''

''ஓ! ரெனல்ட் மோட்டார் கார் தொழிற்சாலைக்குப் போயிருந்தோம். பதினேழு நாடுகளில் அதற்குத் துணைத் தொழிற்சாலைகள் உள்ளன...''

''பதினெட்டாவது துணை ஸ்தாபனம் இந்தியாவில் ஏற்பட்டிருக்க வேண்டுமே? ஆனால் ஓர் அரிய சந்தர்ப்பம் கைநழுவிப் போய்விட்டது. தயாரிப்பது சிறிய மோட்டார் கார் ஆனாலும் மனசு சற்று விசாலமாக இருக்க வேண்டாமா? அது இருக்க வேண்டிய இடத்தில் இல்லாததால்...''

''இதுபோன்ற வேறு சில விஷயங்களும் எங்கள் கவனத்துக்கு வருகின்றன'' என்ற சொக்கலிங்கம் மேலும் தொடர்ந்தார்: ''உதாரணமாக இந்தியாவில் தையல் மிஷின்கள், மின் விசிறிகள் முதலியவை தயாரிக்கும் பெரிய ஸ்தாபனம் ஒன்று உள்ளது. வெளிநாடுகளில் நல்ல மார்க்கெட்டைப் பிடித்துக் கொண்டிருந்தது. இதைக்கண்ட பல மேல்நாட்டு ஸ்தாபனங்கள் இவர்கள் தயாரிப்பை விடத் தரமானதும் நவீனமானதுமான சரக்குகளை உற்பத்தி செய்து அந்த அயல் நாட்டு மார்க்கெட்டைப் பிடித்துக் கொண்டன. 'நீங்களும் போட்டி போட்டுக் கொண்டு உங்கள் தயாரிப்புக்களை நவீனமாக்குங்களேன்' என்று யோசனை கூறினேம். அதற்கு அந்த ஸ்தாபனத்தினர், 'வெளிநாட்டு மார்க்கெட் எங்களுக்கு இல்லாவிட்டால் போகட்டும். அதனால் எங்களுக்கு ஒரு நஷ்டமுமில்லை. உள்நாட்டுத் தேவைகளையே நாங்கள் முழுமையாகப் பூர்த்தி செய்ய முடியவில்லையே' என்றார்கள். அவர்களுக்கு இந்தத் துறையில் இங்கு ஏக போக்கியம் இருப்பதால் தானே இப்படி அலட்சியமாகப் பேசுகிறார்கள்? போட்டா போட்டி இருந்தால்....?''

''இன்னும் சிறப்பாகத் தொழில் வளம் பெருகும். இருக்கட்டும், பாரிஸில் உலகப் புகழ் பெற்ற லூவர் மியூஸியத்துக்குப் போயிருந்தீர்களா?''

''ஆமாம்; அதிகாரிகள் எங்களுக்காக மியூஸியத்தை வழக்கத்தை விட முன்னதாகவே திறந்துவிட்டார்கள். இல்லாது போனல் விமானத்தை நேரத்தில் பிடித்திருக்க முடியாது. லூவர் மியூஸியத்தில் உள்ள மோனு லிஸா ஓவியம்தான் பாரெல்லாம் புகழ் பெற்றது. ஆனல் அண்ணவை மிகவும் கவர்ந்தது, (என்னையும்தான்) ஐம்பது அடிக்கு இருபது அடி நீள அகலம் கொண்ட பிரும்மாண்டமான ஓவியம் ஒன்று. நெப்போலியனுக்கு முடி சூட்டும் காட்சி! அதில்தான் எத்தனை மனிதர்கள்! எத்தனை தோரணைகள்; எத்தனை முகங்கள்; எத்தனை பாவங்கள்!''



ஐ.நா.வில் இந்தியத் தூதர் திரு ஜி. பார்த்தசாரதி தமிழக முதல் அமைச்சருக்கு வரவேற்பு விழா நடத்திக் கௌரவித்தார். விருந்தில் அண்ணு உணவு வகைகளைச் சுவைக்கிருர்.

''பிறகு நியூயார்க்குக்குப் பறந்தீர்களா?''

''இருங்கள். பாரிஸில் நாங்கள் சந்தித்த ஒரு கனவானைப் பற்றிச் சொல்ல வேண்டும். இவர் மேல் சபைத் தலைவர். உதவி ஜனாதிபதியின் அந்தஸ்துள்ளவர். இந்த உயர்ந்த நிலையில் இருபது வருடங்களாகத் தொடர்ந்து இருந்து வரும் மோனர்வில்லி ஒரு நீக்ரோ. அண்ணா அவர்களை வரவேற்று நீண்ட நேரம் அளவளாவிக் கொண்டிருந்தார்.''

''நியூயார்க்கில் நீக்ரோக்கள் வாழும் ஹார்லெம் பகுதிக்கு அண்ணா சென்றிருந்தாராமே!''

''ஆமாம். நான் போகவில்லை.''

''சரி, நீக்ரோ பிரச்னை பற்றி அண்ணாவின் அபிப்பிராயம்?''

'' 'நீக்ரோக்களிடம் இன்று அமெரிக்காவில் ஆட்சியில் உள்ளவர்கள் மிகுந்த அநுதாபத்துடன் நடந்து கொள்ளவே விரும்புகின்றனர். ஆனால் நீக்ரோக்களில் இளைஞர்களாக இருப்பவர்கள் வன்முறைச் செயல்களில் ஈடுபட்டுப் பிரச்னையைச் சிக்கலாக்குகிறார்கள்' என்று அண்ணா அபிப்பிராயப்பட்டார்.''

''நியூயார்க்கில் பாரத நாட்டுப் பொருள்களை விற்பனை செய்யும் ஒரு கடைக்கு அண்ணா விஜயம் செய்தார் என்று பத்திரிகைச் செய்தி கூறியதே!''

''அங்கு அண்ணாவுக்குக் காத்திருந்தது ஏமாற்றம்தான். பாரத நாட்டுக் கலைப் பொக்கிஷங்கள் ஒரு கடல் என்றால் இங்கு மாதிரிக்கு வைக்கப்பட்டிருந்தது ஒரு துளி தான். அவையும் ஒன்றுக்குப் பத்தாக விலை! 'அமெரிக்கர்களிடம் பணம் இருக்கிறது என்று விலையை ஏகமாக ஏற்றிக் கொஞ்சமாக விற்காதீர்கள். அதைவிட மலிவான விலையில் நிறையச் சரக்குகளை, விதம் விதமான கலைப் பொருள்களைத் தள்ளிவிட முயல்வது நல்லது' என்று அண்ணா யோசனை கூறினார்.''

''விவசாயப் பண்ணைகளைப் பார்த்தீர்கள் அல்லவா?''

''நியூயார்க்கில் நமது அமெரிக்கத் தூதர் ஜி. பார்த்தசாரதி அவர்களுடன்தான் தங்கியிருந்தோம். அவரிடம் விடைபெற்றுக் கொண்டு நயாக்ரா நீர் வீழ்ச்சியைப் பார்த்துவிட்டுப் பிறகு நியூஹேவனில் உள்ள பிரிஸ்கோ குடும்பத்தினர் நடத்தும் பண்ணைக்குச் சென்றோம்.''

''அங்கே உங்களை மிகவும் கவர்ந்த விஷயம்?''

''பண்ணையிலிருந்து பால் காலன் காலனாக உற்பத்தியாகிச் செல்கிறது. ஆனால் அங்கு அதைக் கண்ணால் பார்ப்பது இயலாது! எப்படி என்று கேட்கிறீர்களா?

''பால் கறக்க ஓர் இயந்திரம், கறந்த பால் குழாய்கள் மூலம் குளிர்பதனப் பெட்டியை அடைகிறது. அங்கு நீண்ட காலத்துக்குக் கெடாமல் இருக்கும். வாரம் ஒரு முறை பால் வண்டி (மோட்டார் லாரி) வருகிறது. குளிர்சாதனப் பெட்டியிலிருந்து அந்த வண்டிக்குள் பாலை ஓர் இயந்திரம் இறைத்து விடுகிறது. பால் சுத்திகரிப்புத் தொழிற்சாலைக்கு மோட்டார் லாரி செல்கிறது. அங்கு பால் சுத்தப்படுத்தப்பட்டு, பிறகு பாட்டில்களில் விநியோகமாகிறது. கண்ணாடிப் பாட்டிலுக்கு வரும்போதுதான் பாலைக் கண்ணால் பார்க்கிறோம்.''

''யேல் சர்வகலாசாலை மாணவர்கள் அண்ணாவைப் பற்றி என்ன நினைத்தார்கள்?''

''அண்ணாவின் மிக எளிமையான தோற்றம்; பெருந் தலைவன் என்ற தோரணையில் ஆடம்பரம் ஏதும் பண்ணாமல் சரளமாகப் பழகியது; மனத்தில் தோன்றிய உண்மையை ஒளிவு மறைவு இல்லாமல் பேசியது—இவையெல்லாம் அம்மாணவர்களைப் பெரிதும் அவர்பால் ஈர்த்தன. 'எத்தனையோ தலைவர்கள் இங்கு வந்து போயிருக்கிறார்கள். ஒன்று அவர்கள் தங்களைப் பற்றியும் தங்கள் நாட்டைப் பற்றியும் ரொம்பவும் கர்வத்துடன் வருவார்கள்; அல்லது அமெரிக்காவிலிருந்து யார் யாரிடம் என்ன என்ன உதவி பெற்றுத் திரும்பலாம் என்று இட்டம் போட்டுக் கொண்டு உண்டி குலுக்கிய படி வருவார்கள்...நீங்கள் எதற்காக வந்தீர்கள்?' என்று ஒரு மாணவர் கேட்டார்.

''அண்ணா, 'நான் உதவி ஏதும் பெற்றுப்போக வரவில்லை. அப்படி உதவி பெறுவது என்பது பாரத நாட்டில் டில்லி தர்பாரின் ஏகபோக உரிமையாக இருக்கிறது. நான் நட்புறவுடன் உங்களிடம் பழக வந்தேன்' என்றார். எந்த விதமான உள் நோக்கமும் இன்றி மனம் விட்டுப் பழகியதை அவர்கள் விரும்பி ரசித்தார்கள்.''

''வாஷிங்டனிலிருந்து போர்ட்டோரிக்கோவுக்கு நீங்கள் போனது எதற்காக?''

''போர்ட்டோரிக்கோ தீவு சமீப காலமாக வெகு வேகமாக முன்னேற்றமடைந்து வருகிறது. அதன் வளர்ச்சியைக் காணச் சென்றோம்.''

(அடுத்த இதழில் முடியும்)

---

## சாரண இளவரசன்!

வின்ட்ஸர் மாளிகையில் எட்டு வயது இளவரசன் ஆண்ட்ரூ தன் தந்தை பிலிப் அருகில் நின்று, சாரணர்கள் அணி வகுத்து மரியாதை செலுத்துவதை ஏற்றுக் கொள்கிறான். இளவரசன் ஆண்ட்ரூ முதன் முறையாக ஓர் அரசாங்க வைபவத்தில் கலந்து கொள்ளுவதோடு, சாரண மரியாதை செலுத்துவதை இவ்விதழ் பொருளடக்கப் பகுதியில் காணலாம்.



# தரிசனத்துக்குரிய தீன்மூர்த்தி பவன்



அமரர் நேருஜி மறைந்த இரண்டாவது சிராத்த தினம் கொண்டாடப்படுகிறது.

தலைநகரில் உள்ள 'தீன்மூர்த்தி' பவனில் வைக்கப்பட்டிருக்கும் 'நேரு நினைவாலய'த்தைப் பார்க்க உலகின் பல பாகங்களிலிருந்து வரும் எண்ணற்ற மக்கள், மிகுந்த ஆவலுடன் நுழைகிறார்கள். உலகில், தான் வாழ்ந்த காலத்தில், ஒரு வசீகர சக்தியாகத் திகழ்ந்த பாரதப் புதல்வர் வசித்த இல்லத்தைக் காணத்தான் மக்களிடையே அத்தகைய ஆர்வம்!

நேருவின் பல்வேறு சிறப்புக்களைக் காட்டும் கண்காட்சிகள் பல தீன்மூர்த்தி பவனில் அமைக்கப்படுகின்றன. நேரு பிறந்த தினம், அமரரான தினம் போன்ற முக்கிய தினங்களில் இக்காட்சிகள் தொடங்கப்படுகின்றன. இவை தவிர சரித்திர நிகழ்ச்சிகளைக் கண்முன்னே கொணர்ந்து நிறுத்தும் விதத்தில் அமைக்கப்பட்ட சில கண்காட்சிகளும் இங்கு நடைபெறுகின்றன. 'உள்ளாட்சிப் போராட்டம்' (Home Rule League) செப்டம்பர் 25, 1915ல் அன்னிபெஸண்ட் அம்மையாரால் ஆரம்பிக்கப்பட்டது. அதைப் பற்றியும் அப்போராட்டத்தில் தீவிரமாகக் குதித்துப் பணியாற்றிய திலகர், சுப்பிரமணிய அய்யர், ஜின்னா, மோதிலால் நேரு, ஜயகர், தேஜ் பகதூர் சப்ரு, சிந்தாமணி ஆகியோரைப் பற்றியும் 'கண்காட்சி' ஒன்று நடைபெற்றது.

இக்கண்காட்சிகள் நடைபெறும் அறைகளைத் தவிர, மற்ற அறைகளில் உள்ள நேருஜியின் நினைவுச் சின்னங்கள் ஒருவித மாறுதலுமின்றி அப்படி அப்படியே வைக்கப்பட்டுள்ளன.

இங்கு வரும் மக்கள்தான் எத்தனை வகை? 1964ம் வருடம் நவம்பர் 14ந் தேதி ஆரம்பிக்கப்பட்ட இக் கண்காட்சியில் ஒரு பஞ்சாபிக் கிழவி, நேருவின் படத்துக்குமுன் நின்று அழுதும் அரற்றியும் அட்டகாசம் செய்தாள். சில நாட்கள் அவள் அவ்விதம் வந்து கொண்டிருந்தாள். மற்

நேருஜி இருந்த சிறைச்சாலைகளின் தோற்றமும் கண்ணாடிப் பெட்டியில் அவர் எழுதிய 'டிஸ்கவரி ஆப் இந்தியா'வின் கையெழுத்துப் பிரதியும்.



**மே 27-ந் தேதி**
**நேருஜி**
**நினைவு நாள்**



தீன்மூர்த்தி பவனின் ஒரு தோற்றம்.

ஒரு மனிதர், பற்றற்ற வைராகிபோல் காட்சி யளிப்பவர், கையில் தீபாராதனைத் தட்டேந்தி, பிரசாத மிட்டாய்களை நினைவாலயக் காவலாட்களுக்கெல்லாம் வழங்கினார். ஒருவர், ஆங்காங்கே நின்று வெறித்து நோக்குவார். என்ன காரணமாம்? அவர் கூறிய பதில் சுவாரசியமானது. நேருவே அவர்தானாம். புனர்ஜன்மம் எடுத்து வந்துள்ளாராம்! இரு கால்களும் அற்ற ஒருவர், படை பதைக்கிற வெய்யிலில், உதவியை நாடாமல், வியர்வை ஒழுக, உத்வேகத்துடன் ஒவ்வோர் இடமாகத் தத்தித்தத்திச் சென்று பார்த்தது மறக்க முடியாத நிகழ்ச்சி. நோயாளி ஒருவருக்கு மாடிப்படி ஏற இயலவில்லை. அவருக்கு 'இருதயக் கோளாறு'. ஆனால் நேரு இறுதியாக உயிர் நீத்த படுக்கை அறையைக் காணவேண்டுமென விரும்பினார். 'லிப்டில்' — செல்ல அனுமதி பெற்று நேருவின் படுக்கையறையைக் கண்ட திருப்தியுடன் திரும்பினார்.

தென்னிந்தியர்களுக்கும் குறைவில்லை. அவர்களில் சில அப்பாவிகளும் இல்லாமல் போகவில்லை. இதோ ஒரு நிகழ்ச்சி: நினைவாலயத்தில் வேலை செய்யும் பெண் ஊழியர், வடக்கத்திக்காரர், சோபாவில் அமர்ந்திருக்கும் சமயம். அவரைக் கண்டு மெய்ம்மறந்து பக்தியுடன் நின்றனர் சில தென்னிந்தியப் பெண்மணிகள். நான் அவர்களை விசாரித்தபோது, அவர்கள்: ''இவங்கதான் இந்திரா காந்தி அம்மைங்களா?'' என்று சாவகாசமாக வினவினர்.

நேரு மறைந்து ஓராண்டு ஓடிச் சென்ற பிறகு 1965-ஆம் ஆண்டு மே 27ந் தேதி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி உள்ளத்தை நெகிழ வைக்கும் விதத்தில் பஜன்களைப் பாடினார். அதைக் கேட்க வந்திருந்த திரு ராதாகிருஷ்ணன், திரு ஜாகிர் ஹுசேன் இவர்களுக்கிடையே அமர்ந்து, கண்களை மூடி, ஆழ்ந்த தெய்விக பாவத்துடன் பஜன்களை ரசித்தவர் காலஞ்சென்ற பிரதமர் லால்பகதூர் சாஸ்திரி.

உலகின் பல பாகங்களிலிருந்தும் டில்லிக்கு வரும் தலைவர்கள், நேரு நினைவாலயத்துக்கு விஜயம் செய்வது வழக்கமாகி விட்டது. சமீபத்தில் வந்த எதியோபிய மன்னர் ஹெய்லி சலாசி, டிட்டோ, நாசர், கோசிஜின் போன்ற பல பிரமுகர்களைக் குறிப்பிடலாம். ஜவாஹர்லால் நேரு தங்கியிருந்த அறைகளைக் கண்டதும் ஏதோ பழைய நினைவுகள் உண்டாகி அவர்கள் மனம் சில நிமிடங்கள் தடுமாறத்தான் செய்கிறது.

இப்பொழுது இந்நினைவாலய மாடிப் பகுதியில் நடைபெறும் கண்காட்சியின் தலைப்பு 'சுதந்திர உதயம்'.

இந்திய வரலாற்றில் 1945-47ஆம் ஆண்டுகளில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகளைப் பத்திரிகைச் செய்திகள், நிழற்படங்கள், கையெழுத்துப் பிரதிகள் இவை மூலமாகத் தொகுத்துக் கண்காட்சியை அமைத்துள்ளனர்.

- என். ராஜாமணி



தீன்மூர்த்தி பவனில் உள்ள நேரு நினைவாலயம் - ஒரு காட்சி.

# ஒளியைவிட வேகம்!

ஒளிக் கதிர்களைப் பற்றிய ஆராய்ச்சிக்கும் இந்தியாவுக்கும் ஏதோ நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டும். ஒளிக்கதிர் ஆராய்ச்சியில் புது உண்மைகளைக் கண்டுபிடித்து உலகத்தின் கவனத்தை முதன் முதலாகக் கவர்ந்த இந்தியர் டாக்டர் ஸி. வி. ராமன். அதற்கு அவருக்கு நோபல் பரிசே கிடைத்தது!

அதே போல் இன்று உலக பௌதிக விஞ்ஞானிகளைக் கவர்ந்திருக்கும் இளைஞர் டாக்டர் என்னெய்க் கல் சாண்டி ஜார்ஜ் சுதர்சனம் என்பவர்.

தமது ஆராய்ச்சியின் பயனாக உலகில் ஒளி அணுக்களைவிட வேகமாகச் செல்லும் நுண் பொருட்கள் இருக்கின்றன என்ற புரட்சிகரமான செய்தியை வெளியிட்டிருக்கிறார் டாக்டர் சுதர்சனம்.

இதுவரை ஐன்ஸ்டீன் போன்ற மாபெரும் விஞ்ஞானிகள் கருதி வந்ததெல்லாம் தவறு என்று நிரூபிக்கும் அளவுக்குப் புரட்சிகரமான செய்தியாகும் இது.

ஒளி அணுக்கள் விநாடிக்கு 1,86,000 மைல்கள் வேகத்தில் இயங்குகின்றன. அதைவிட வேகமாக இயங்கும் பொருள் உலகில் உள்ளது என்றால் அது புரட்சிகரமான செய்தியல்லவா?

இந்தப் புரட்சிகரமான செய்தியைக் கண்டுபிடித்த டாக்டர் சுதர்சனம், இதன் முக்கியத்துவத்தை உணராமலேயே இருந்திருக்கிறார். இந்தச் செய்தியை 1962ல், ''அமெரிக்கன் ஜர்னல் ஆப் பிஸிக்ஸ்'' என்ற விஞ்ஞான சஞ்சிகையில் வெளியிட்டுவிட்டு நிம்மதியாக அவர் தமது ஆராய்ச்சிகளில் ஈடுபட்டுவிட்டார்.

சமீபத்தில் ஓர் அமெரிக்க செய்தி ஸ்தாபனம், இந்த முக்கியமான விஞ்ஞான உண்மையைக் கண்டுபிடித்தவர், கொலம்பியா பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் ஜெரால்ட் பெயின்பர்க் என்று ஒரு செய்தியை வெளியிட்டது. இது எப்படி உண்மையாகும் என்று சீறி எழுந்தார் ஸைரக்யூஸில் பணியாற்றும் இந்திய விஞ்ஞானி டாக்டர் சுதர்சனம்.

இதில் விந்தை என்னவென்றால், அமெரிக்க செய்தி ஸ்தாபனம் அமெரிக்கப் பேராசிரியருக்கு 'கிரெடிட்' தேடித் தர முயன்றாலும் அமெரிக்கப் பேராசிரியர் டாக்டர் பெயின்பர்க் தமது கட்டுரையில் டாக்டர் சுதர்சனம் அவர்களின் கண்டுபிடிப்புகளை மேற்கோள் காட்டி அங்கீகரித்தே தம் ஆராய்ச்சிகளை வெளியிட்டிருக்கிறார்.

டாக்டர் சுதர்சனம் அவர்களின் ஆராய்ச்சியினால் விளையக்கூடிய பயன் என்ன என்று கேட்கலாம். இன்று சந்திர மண்டலத்துக்குப்போகலாமா செவ்வாய்க் கிரகத்துக்குப் போகலாமா என்றல்லவா ஆராய்ச்சிகள் நடக்கின்றன! இந்தக் கிரகங்களுக்குப் போய்ச் செய்திகள் கொண்டுவர ஒளியணுக்களைவிட வேகமானவை இல்லை என்று கருதி வந்துள்ளனர். இப்பொழுது அவற்றைவிட வேகமாகச் செல்லக்கூடிய பொருள் உண்டு என்று நிரூபிக்கப்பட்டிருப்பதால், அக்கோள்களைப் பற்றிய செய்திகளை அறிய இப்புதுப் பொருளை உபயோகப்படுத்தலாமா என்று விஞ்ஞான உலகம் ஆராய்கிறது!

ஒளிக் கதிர்களைவிட வேகமாக இயங்கக் கூடியவை என்னும்போது ஏதோ உபசாரத்துக்குச் சொன்னதாக எண்ணக் கூடாது. அதன் வேகம் மிக மிக அதிகம். ஓர் இடத்திலிருந்து புறப்பட்ட நேரத்துக்கு முன்னதாகவே, போய்ச் சேர வேண்டிய இடத்தை அடைந்துவிடக் கூடிய அளவுக்கு வேகம் கொண்டவையாம்! இது முற்றிலும் உண்மை. அந்த விஞ்ஞான பரிபாஷை நமக்குப் புரியாதாகையால் அதை விளக்க முயலாமல் விட்டுவிடுகிறோம்.

டாக்டர் சுதர்சனம் சென்னை கிறிஸ்தவக் கல்லூரி மாணவர் என்னும் போது தென்னகத்தவர்களுக்குப் பெருமையாக இருக்கும். 1948 முதல் 51 வரை அங்கு படித்தார். பின்னர் பம்பாயில் டாட்டா ஆராய்ச்சிக் கழகத்தில் பணியாற்றிவிட்டு, 55ல் அமெரிக்காவுக்குச் சென்று ராசெஸ்டர் சர்வகலாசாலையில் ஆராய்ச்சி புரிந்து டாக்டர் பட்டமும், விஞ்ஞான உலகில் நிரந்தர ஸ்தானமும் பெற்று விட்டார். உலகில் பல நாடுகளுக்குச் சென்றிருக்கிறார். 1964லிருந்து ஸைரக்யூஸ் சர்வகலாசாலையில் பணியாற்றுகிறார். சமீபத்தில் தில்லிக்கு வந்திருந்தார். அவரை மாஸ்கோவும் அழைத்திருக்கிறது. மாஸ்கோவில் சில மாதங்கள் தங்கிவிட்டு, இவ்வாண்டு செப்டம்பரில் மீண்டும் ஸைரக்யூஸ் சர்வகலாசாலைக்குப் போய்ச் சேருவார்.

அவர் மைசூர் ராஜ்யத்தின் முன்னாள் பிரதம நீதிபதி நிட்டூர் சீனிவாசராவ் அவர்களின் புதல்வியை மணந்திருக்கிறார். இப்பெண்மணி எலெக்ட்ரானிக் இஞ்ஜினீரிங்கில் பம்பாய் டாட்டா ஆராய்ச்சிக் கழகத்தில் ஆராய்ச்சி செய்து வந்த போது, டாக்டர் சுதர்சனத்தைச் சந்திக்க நேர்ந்தது. அமெரிக்காவுக்குச் சென்ற பின் ஸ்ரீமதி சுதர்சனமும் கெமிகல் என்ஜினீரிங்கில் மாஸ்டர் பட்டம் பெற்றிருக்கிறார். ஸ்ரீ சுதர்சனம் பிறப்பால் மலையாளி; கல்வி பயின்றது தமிழகத்தில்; பெண் எடுத்தது கன்னடத்தில். ஆனால் அவர் ஆராய்ச்சிப் பணியோ உலகத்துக்கே பொது!

— ஆதாரம்: 'ஹிந்து'



டாக்டர் சுதர்சனம்

# கதிர்காமக் கந்தன்



தமிழ்க் கடவுளான முருகனைக் 'கதிர்காம தேவா' எனச் சிங்களவர்கள் பக்தியுடன் அழைத்து வழிபடுகிறார்கள் கதிர்காமத்தில். தொன்மையான ஆடிவேல் திருவிழா இங்கு தான் கோலாகலமாகக் களை கட்டுகிறது.

சிங்கள பௌத்தர்கள் கதிர்காமக்கந்தனைப் பூரணமாக நம்புகிறார்கள். தேர்தலுக்கு முன்னர் திரு டட்லி சேனநாயகா, திருமதி பண்டாரநாயகா உட்படப் பல கட்சித் தலைவர்கள் கதிர்காமத்துக்குத் தீர்த்தயாத்திரை போய்க் கந்தனை வழிபட்டுத் தேர்தல் பிரசாரங்களில் இறங்குகிறார்கள்.

பல்லாயிரக்கணக்கான பௌத்தர்களும், இந்துக்களும், 'முருகா, முருகா' என எழுப்பும் பக்தி கோஷம் விண்ணை முட்டும்.

கதிர்காமக் கோயிலுக்குப் போய் வந்தவர்களை 'முருகனை எந்தக் கோலத்தில் தரிசித்தீர்கள்?' என்றால் விழிப்பார்கள். கர்ப்பக்கிருகத்தில் என்ன இருக்கிறது என்பது யாருக்குமே தெரியாது! வள்ளி தெய்வானையுடன் தீட்டப்பட்ட திருமுருகனின் வர்ணத் திரைச்சீலைதான் கர்ப்பக் கிருகத்தை மறைத்துக் கொண்டு தொங்குகிறது.

கபுராளா என்று அழைக்கப்படும் சிங்களப் பூசாரி ஒருவருக்கு மட்டும் தான் உள்ளே போக லைசென்ஸ் உண்டு. கர்ப்பக்கிருகத்துக்குள் சக்தி வடிவமான மந்திரச் சக்கரம் ஒரு பேழையில் வைக்கப்பட்டுள்ளதாய்ச் சொல்லுகிறார்கள்.

மாணிக்க கங்கையில் நீராடி, பக்திமயமாகத் தம்மைத் தரிசிக்க வரும் லட்சக்கணக்கான பக்தர்களுக்கு உருவமற்ற முருகன் கருணை மழை பொழிகிறார் கதிர்காமத்தில்!

— கே. வி. எஸ். மோகன்

**இலங்கைக் காட்சி.6**

# துருவங்கள் சேர்ந்தால்....?



சென்னை சர்வகலாசாலை உப அத்யட்சகர் டாக்டர் ஏ. எல். முதலியார் தமிழில் சிறுகதை எழுதிப் பார்க்கிறார்.

பிரபல பிஸினஸ் மாக்னட் மோகனரங்கத்தின் ஏர்கண்டிஷண்ட் ரூமில் ஒருவிதமான ஸெண்ட் பரவிக் கொண்டிருந்தது. வெளியே வெய்யில் 'நூற்றி ஆறாக இருந்தாலும் சரி, ஆயிரத்து ஆறாக இருந்தாலும் சரி! நமக்கென்ன வொர்ரி!' என்ற மனோபாவத்துடன் மோஹனரங்கம் ரிவால்விங் சேரில் அமர்ந்து கம் பிஸினஸ் சம்பந்தமான பைல்களில் அட்டென்ஷனை ஃபோகஸ் பண்ணிக் கொண்டிருந்தார்.

அறைக் கதவைப் படாரென்று திறந்து கொண்டு சாந்தவதனம் சுழல்நாற்காலியை நோக்கி நேராக வந்தான்.

சாந்தவதனம் மோஹனரங்கத்தின் ஒரே சன் என்றும், பிராமினென்ட் காலேஜில் ஒன்றில் பி. எஸ்ஸி. பைனல் இயர் ஸ்டூடன்ட் என்றும் ரீடர்ஸ் தெரிந்து கொள்வது அவசியமாகும்.

''அப்பா ! அவுட் !'' என்றான் சாந்தவதனம் அழுத்தமாக.

''இந்த வருஷமும் யூனிவர்சிட்டி கொஸ்ச்சன் பேப்பர்கள் அவுட்டா ?...... ஹூம் ! அதனாலே உனக்கென்ன பிரயோசனம்? ஆன்சர்களெல்லாம் புஸ்தகங்களில் எங்கே எங்கே இருக்கின்றன என்றே உனக்குத் தெரியாதே ! இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் உன்னைப் போன்ற பாடப் புஸ்தகமே பார்த்தறியாத மாணவர்களுக்கு 'ஆன்ஸர் டிடெக்டர்'னு ஒரு மிஷின் கண்டுபிடிச்சு பேடன்ட் பண்ணிக் கொண்டால் மார்க்கெட்டில் நல்ல டிமாண்ட் இருக்கும்.''

''அப்பா ! யூ அவுட்!'' என்று இப்போது ஒரு வார்த்தையைத் துணைக்குச் சேர்த்துக் கொண்டான் சாந்தவதனம்.

''நான் அவுட் ஆக இன்னும் நிறைய டைம் இருக்கு. என் சேவிங்ஸ் டார்கெட்டில் எழுபத்தி மூன்று லட்சம் இன்னும் பாக்கி! போ போ ! நான் ரொம்ப பிஸியாக இருக்கேன். என்னை டிஸ்டர்ப் பண்ணாதே !.... பை தி வே..... இங்கிலீஷ் பேசற போது கவனமாப் பேசு ! பிரடிகேட்டை விழுங்கிட்டு மொட்டையாகப் பட்லர் இங்கிலீஷ் பேசாதே ! இங்கிலீஷ் ஒரு வொண்டர்ஃபுல் லாங்வேஜ். அதுதான் விண்டோ ஆப் தி வோர்ல்ட்! அதை இப்படிக் கொலை பண்ணி ஒழிக்காதே !''

''நோ டைம் டாக்கிங் கரெக்ட் இங்கிலீஷ். அர்ஜென்ட் ஸ்டார்ட்.....'' என்று பதறினான் சாந்தவதனம்.

''என்னடா ! என்னை ஓட்டப் பந்தயத்துக்குப் பழக்குகிறாயா? ஸ்டார்ட்டாமே, ஸ்டார்ட் ! உனக்கு ஏதும் உடம்பு சௌகரியமில்லை என்று நினைக்கிறேன். மெண்டல் ஹாஸ்பிடல் கேஸாக மாறிடுமோன்னு பயப்படறேன். பிளீஸ் கெட் அவுட் அண்ட் லீவ் மீ இன் பீஸ் !''

''டாடி ! இல்னெஸ்ஸுக்கு பிரிஸ்கிரிப்ஷன் தயார். நீங்கதான் கொஞ்சம் கம்பவுண்டராக ஆக்ட் பண்ணி மருந்து கலக்கித் தர வேண்டும். அதற்கு நீங்க இப்போதே என் கூட மிஸ்டர் பாலசுந்தரம் வீட்டுக்கு வந்து நான் பெண் பார்க்கிறதுக்கு விட்னஸாக இருக்கணும். நான் அவளை பிரபோஸ் பண்ற போது நீங்க செகண்ட் பண்ணணும்! இல்லே டேஞ்சர் ! சாயங்காலம் வேறே பார்ட்டி பெண் பார்க்க வரப் போறாங்க. பாலசுந்தரம் அந்த பார்ட்டிக்குத் தலையை ஆட்டிட்டா நான் நேரே மெண்டல் ஹாஸ்பிடலுக்குள்ளே போக ரிசர்வ் பண்ணாமலேயே சீட் வாங்கிடுவேன். டாடி !.... பிளீஸ் ! இது லவ் அண்ட் லைஃப் பிராப்ளம் டாடி !'' சாந்தவதனம் கெஞ்சினான்.

''ஏண்டா டேய்! நான் தெரியாமல்தான் கேட்கிறேன். உனக்கு பி. எஸ்ஸி.லே என்னடா மேஜர் சப்ஜெக்ட்? சொல்லுடா!''

''என்னப்பா ! இப்படித் திடீர்னு கேட்டாக்க?.... யோசிக்கக் கொஞ்சம் டயம் கொடுங்க....'' சாந்தவதனம் மெமரியைக் குடைய முற்பட்டான்.

''கெமிஸ்டிரிடா ! நான் சொல்கிறேன் ! உனக்கு அது நினைவு இருக்காது. நீ படிக்கிறதெல்லாம் காதலாலஜி. கண்ணிலே படற பெண்களையெல்லாம் காதல் பண்றது மேஜர். ஊர் சுத்தறதும் சினிமாத் தியேட்டர்களிலே நுழைவதும் ஆன்ஸிலியரீஸ்! இந்த சப்ஜெக்டுகளுக்கு மாத்திரம் லாங்வேஜ் பிராப்ளம் கிடையாது. 'ஒழிக'ன்னு கத்திக்கிட்டு ஸ்டிரைக் பண்ண மாட்டீங்க !.... அப்பா அசட்டு வதனம்! என்கிட்டே இனிமே காதல் கல்யாணம்னு பேசிக்கிட்டு வந்து நின்னே உன்னை என்ன பண்ணுவேன்னு எனக்கே தெரியாது. ஏற்கனவே உன்னைப் பற்றிப் பல புகார்கள் காதிலே விழுந்திருக்கு. இப்போ நீயாகவே வந்து மாட்டிக் கொண்டிருக்கிறாய்! ஜாக்கிரதை! கல்லூரி மாணவனாக லட்சணமாக இரு ! இந்த மெட்ராஸ் யூனிவர்சிட்டி கௌரவத்



''இந்த முத்துமாலையைப் போய் ஐந்து ரூபாய் என்கிறாயே.... அந்த ரூபாய்க்குப் பத்து தென்னந் தோப்பும் வாங்கினாலும் வீட்டைச் சுத்தமா வச்சுக்கலாம்!''

''சரி! கழுத்திலே கட்டித் தொங்கவிட்டுக்க முடியுமா ?''

துக்கும் திறமைக்கும் பெயர் பெற்றது! நினைவு வைத்துக் கொள்!''

''புகார் ! பூம்புகார் ! கோவலன்.... கண்ணகி.... மாதவி.... போங்கப்பா!'' என்று கோபத்துடன் ஆரம்பித்த சாந்த வதனம் 'சடனு'க் குழைந்து நெளிந்து, ''டாடி ! டாடி!.... அவள் பேருகூட மாதவிதான் டாடி! 'மாதவிப் பொன் மயிலாள் தோகை விரித்தாள்'ங்கிற பாப்புலர் ஃபிலிம் சாங்கை நீங்க கேட்டதில்லே? அது மாதிரி அவள்.....''

சாந்தவதனம் முடிக்கு முன்பே மோகன ரங்கம் அவன் தோள்களைப் பிடித்து ஜெர்க் பண்ணினார். ''உனக்கு ஏதும் ஹிஸ்டீரியா இருக்குமோன்னு சந்தேகப்படறேன்! நீ படிச்சுக் கிழிச்சது போதும். நாளையிலிருந்து நீ காலேஜ் போக வேண்டாம். யூ வில் பி மை செக்ரட்டரி. டுவெண்டி ஃபோர் அவர்ஸும் என் கண் பார்வையிலேயே இருப்பாய் !.... அண்டர்ஸ்டாண்ட் ?''

ஃ ஃ ஃ

டேஸ் ரோ லாச்சு. சாந்தவதனம் இப் போதெல்லாம் யாருடனும் பேசுவதில்லே. காலேஜுக்குப் போனான். யூனிவர்ஸிட்டி எக்ஸாமினேஷன்களை எழுதினான். சித்தனையி லாழ்ந்த ஞானி — செயிண்ட் போலே நடந்து கொண்டான். உணர்ச்சிகளுக்கு எந்தவித இடமும் கொடுக்கவில்லே.

ஒரு நாட் காலே. பத்திரிகைப் பையன் வீசி எறிந்துவிட்டுப் போன செய்தித் தாளை விரித்துப் பார்த்த சாந்தவதனம் ஆனந்தத் தால் தலைமேலே ஸீலிங்கில் இடிக்கும்படி துள்ளிக் குதித்தான். பத்திரிகையும் கையு மாகப் பாத்ரூமில் பல் விளக்கிக் கொண் டிருந்த மோகனரங்கத்தைத் தேடிப்போனான்.

''டாடி ! இதோ பாருங்கள்! உங்கள் பிள்ளை உங்களைவிட ஒன்றும் குறைந்தவ னில்லே திறமையில்! எக்ஸாம் ரிஸல்டுகளைப் பாருங்கள்! நான் முதல் வகுப்பில் பாஸ் செய்திருக்கிறேன். இப்போது என்ன சொல்லு கிறீர்கள் ?''

''இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லே. நாளைக் காலைப் பேப்பர்லே ஏதாவது கரெக் ஷன் வருகிறதா என்று பார்க்க வேண்டும். வரும் என்று எதிர்பார்க்கிறேன்.''

'ஓஹோ ! அப்படியா விஷயம்? நிச்சய மாகக் கரெக்ஷன் வராது. எனக்கு முதல் வகுப்புக் கொடுக்காமல் எக்ஸாமினர்களால் இருந்திருக்கவும் முடியாது. எனக்குத்தான் ஆன்ஸர் பேப்பர் அவுட் ஆயிற்றே!''

''வாட் நான்சென்ஸ்! கொஸ்ச்சன் பேப்பர் அவுட் ஆகும் என்று கேள்விப்பட் டிருக்கிறேன். ஆனால் ஆன்ஸர் பேப்பர் அவுட் என்று சொல்லும் மகாமேதை இந்த உலகி லேயே நீ ஒருத்தன்தான்! உங்க அம்மா உன்னைப் பெற்றெடுக்க எந்த வேளையிலே மெடர்னிட்டி ஹாஸ்பிடலுக்குப் போனாளோ தெரியலே! நிச்சயமாக அது நல்ல வேளை யில்லே !'' என்று அலுத்துக் கொண்டார் மோகனரங்கம்.

''வாபஸ் வாங்குங்கள் டாடி ! வாபஸ் வாங்குங்கள்! எனக்கு அவுட் ஆனது ஆன்ஸர் பேப்பர்! கொஸ்ச்சன் பேப்பர் அவுட்டாகி எனக்கு என்ன யூஸ் ? யாரு ஆன்ஸர்களைக் கண்டுபிடிக்கிறது? கொஸ்ச்சன் பேப்பரை எங்கிருந்தோ எப்படியோ, அவுட்டாக்கிக் கொண்டு வந்து அவைகளுக்கான ஆன்ஸர் களையும் கரெக்டாகத் தயாரித்துக் கொடுத்து அவைகளை நான் உருப் போட வேண்டும் என்ற வாக்குறுதி பெற்ற நபர், மதிப்புக்குரிய என் ஸ்நேகிதி மிஸ் மாதவி. 'மாதவிப் பொன் மயிலாள் தோகை விரித் தாள்' என்கிற ஃபிலிம் சாங்கைக்கூட நீங்கள் கேட்டிருப்பீர்கள். அதே போல, பரீட்சை ரிஸல்ட் வரும் வரை அவளைச் சந்திக்காம லிருந்து ரிஸல்ட் வந்த பிறகு உங்கள் அனுமதி பெற்று அவளை மணந்து கொள்வ தாகவும் வாக்குறுதி அளித்திருக்கிறேன். டாடி ! இப்போ வாட் டு யூ சே ?''

''இனிமேல் யார் உன்னை என்ன கேள்வி கேட்டாலும் ஆன்ஸர் தயார் பண்ணிக் கொடுக்க ஒரு ஹ்யூமன் மெஷினைக் கண்டு பிடிச்சுட்டே !.... வெரிகுட்! என் பையனை ஃபஸ்ட்கிளாஸிலே பாஸ் பண்ண வைச்ச பொண்ணுக்கு ஒரு மக்குப் பயலைப் பிரசண்ட் பண்றதிலே எனக்கு என்ன நஷ்டம்? சரி பீரிங் மீ தி பஞ்சாங்கம். நல்ல டயமா பார்த்து மாதவி வீட்டுக்குக் கிளம்புவோம்.''

-கோமதி சுவாமிநாதன்

---

**அடுத்த இதழில் : திரு டி. எம். சௌந்தரராஜனும் திருமதி பி. சுசீலாவும் சேர்ந்து தேர்தல் பிரசாரம் செய்கிறார்கள்.**

## பார்வையில்லாதவர்களுக்கு ஒரு பூங்கா

வியன்னா நகரத்தில் 'வெர்தெம்ஸ்டன் பார்க்' என்றோர் அழகான பூங்கா இருக்கிறது. இதன் ஒரு பகுதியைக் கண்ணில்லாதவர்களுக்கென்றே நிர்மாணித்திருக்கிறார்கள். ஒன்றரை ஏக்கர் பரப்பளவுள்ள அந்தப் பூங்காவில் பார்வையில்லாதவர்கள் நறுமலர்களின் மணத்தை நுகரலாம்; அவற்றின் மென்மையைக் கரங்களால் தொட்டு உணரலாம்; அருவியின் 'சோ' என்ற வீழ்ச்சியைக் கேட்டு ரஸிக்கலாம்; பட்சி ஜாலங்களின் இன்னிசையைக் காது குளிரக் கேட்டு மகிழலாம். இதற்காகவே அங்கு இன்னிசை பொழியும் பறவைகளை வளர்க்கிறார்கள். செயற்கை அருவிகளை உருவாக்கியிருக்கிறார்கள்.

பல நாடுகளிலிருந்தும் பார்வையற்றவர்கள் இங்கு வருகிறார்கள். அவர்கள் இந்தத் தோட்டத்தின் வாயிலிலிருந்து உள்ளே போக எளிதாக இருக்கும்படி பாதை அமைக்கப் பட்டுள்ளது. பூங்காவின் முகப்பில் அதன் வரைபடம் ஒன்று இருக்கிறது. அதில் குருடர்கள் படிக்க எளிதாக பிரெய்லி எழுத்துக்களில் விளக்கம் இருக்கிறது. உள்ளே உள்ள பூஞ்செடிகளிலெல்லாம் அவைகளின் பெயர்கள் 'பிரெய்லி' எழுத்துக்களில்தான் எழுதி வைக்கப் பட்டுள்ளன. பார்வையில்லாதவர்கள் சுலபமாகத் தங்கள் கைகளில் எடுத்துக் கொஞ்சி மகிழ்வதற்காக அங்கே பழக்கப்பட்ட முயல்களும் ஆட்டுக் குட்டிகளும் உலவுகின்றன. இங்கே பார்வையற்றவர்களுக்காகப் பட்டுப் போன்ற புல் தரை இருக்கிறது. 'பிரெய்லி' எழுத்துப் புத்தகங்கள் கொண்ட சிறு புத்தகசாலை ஒன்றும் இங்கு இருக்கிறது.

ஆதாரம்: **"காரவான்"**

தகவல்: **சரோஜா ராமச்சந்திரன்**



## மூன்றெழுத்து

**' ஹூம்ம் '**

என்று அலுப்புப் பெருமூச்சைச் சுட்டிக் காட்டும் மூன்றெழுத்துடன் விமர்சனத்தை முடித்துக் கொள்ளலாம்தான். ஆனால் எம். கே. டி. படங்களுக்குப் பிறகு 25 வாரம் ஓடி 'ரிகார்டு' ஏற்படுத்திய 'நான்' படத்தை எடுத்த ராமண்ணாவின் தயாரிப்பாயிற்றே இது! இதுவும் 'வசூல்' என்ற மூன்றெழுத்தைப் பொறுத்த வரை 'தேட்டை' என்ற மூன்றெழுத்துத்தான்; 'வேட்டு' என்ற மூன்றெழுத்தல்ல. காரணம், 'டெம்போ' என்ற மூன்றெழுத்துத்தான்.

**பழசு :**

அரைப் பைத்தியமாக நடிக்கும் பெண், பாடிப் பிச்சை எடுக்கும் கட்டம், புதைத்த பணத்தைத் தேடி எடுப்பது, 'கும்கும்', 'டமால், டுமீல்' முதலியவற்றைப் 'பழசு' என்ற மூன்றெழுத்தால் வர்ணிக்கலாம்.

**குப்பை :**

குழந்தைகள் ஜன்னல் வழியே பார்த்துக் கதறிக் கொண்டிருக்கையில் தாயார் தூக்குப் போட்டுக் கொள்வதைக் 'குப்பை' என்ற மூன்றெழுத்தைச் சொல்லி ஒதுக்கிவிட வேண்டியதுதான்.

**தரம் :**

இம்மூன்றெழுத்தை, ஜெயலலிதாவும் ரவிசந்திரனும் பெரிய பெட்டியில் அடைக்கப் பட்ட பின்னரும் சோர்வடையாமல் உற்சாகமாக ஆடிப் பாடுவது; வெளிப்புறக் காட்சிகள்; காமிரா கையாளப்பட்டிருக்கும் முறை ஆகியவற்றுக்குப் பயன்படுத்தலாம்.

**காப்பி :**

இதுவும் மூன்றெழுத்துத்தானே! டாக்டர் கோல்ட் ஃபுட், இப்கிரெஸ் ஃபைல், அரபெஸ்க் இன்னும் ராஜகுமாரியின் அண்மையில் ஓடிய இரண்டொரு 'டமால் டுமீல்' படங்கள் (ஏகப்பட்ட டமால் டுமீல் படங்கள் வருவதால் பெயர்கூட ஞாபகம் இருப்பதில்லை!) அத்தனையிலும் உள்ள பல காட்சிகளை 'அபேஸ்' பண்ணியிருக்கிறார்கள்! ('அபேஸ்' என்பதும் மூன்றெழுத்தே!) ஆனால் காப்பியில் டிகாக்ஷன் போதவில்லை! உதாரணமாக ஓர் அமெரிக்கப் படமாயின் புது மாடல் டாட்ஜைத்தான் புல்டோஸரால் நசுக்கப் படத் தேர்ந்தெடுப்பார்கள். ஏலத்தில் வாங்கிய விலை போகாத பழைய மாடல் காரை உபயோகப்படுத்த மாட்டார்கள். அதிலும் சிக்கனம் கருதி இஞ்சினைத் தனியாகக் கழற்றி வைத்து விட்டார்களோ என்னவோ?





அது அவசரத்துக்கு 'ஸ்டார்ட்' ஆகித் தொலைய மாட்டேனென்கிறது. சமயத்துக்கு உதவாத அது நகங்கினால்தான் என்ன?

**கதை:**

இந்த வார்த்தையில் இருப்பது இரண்டெழுத்துத்தான். அதனால்தான் அது நொண்டுகிறது !

**'ஏ. ஒன்.':**

நாடக நாரதர் காலில் விழும் நாகேஷ், 'ஏண்டா, என் வேட்டியை எடுத்துக் கட்டிக் கிட்டே?' என்று முணுமுணுப்பது; ஜெயலலிதாவிடம் ரகசியம் பேசக் காதை மறைத்திருக்கும் அவள் கேசத்தைத் தூக்குவது ஆகியவை 'ஏ. ஒன்' என்ற மூன்றெழுத்தைத் கட்டிக் கொண்டு போகின்றன.

**பாவம் :**

இந்த மூன்றெழுத்து அனுதாபம் வித்யாவுக்கு. அவரைச் சொல்லிப் பயனில்லை. நல்ல பரத நாட்டியத்தை இந்தக் காலத்தில் யார் மதிக்கிறார்கள்? இருந்தாலும் இளவட்டங்கள் வேறு அர்த்தம் செய்துகொண்டு சிரிக்கும் அசட்டு வசனத்தை ஹோட்டல் ரிஸப்ஷன் டெஸ்க் அருகே பேசாமல் இருந்திருக்கலாம்.

**மோசம் :**

இந்த மூன்றெழுத்து சில விரஸமான நடனங்களுக்கு என்றால் நாடகத்தில் வள்ளிக் குறத்தி டுவிஸ்ட் ஆடுவதற்குப் படுமட்டம் என்ற ஆறெழுத்தைப் போட வேண்டியது தான். ஆனால் அசோகனின் குடுமியை நாகேஷ் பிடித்திழுக்கும் காட்சிக்கு 'சீச்சீ' என்ற மூன்றெழுத்தே போதும்!

**'Pop'**

என்ற ஆங்கில மூன்றெழுத்து குறிப்பது ஜனரஞ்சகத்தை. இசை, பாடல்கள் அப்படி.

**கொடுமை :**

நாகேஷ் அந்த அரைப் பைத்தியத்துக்கு மாலையிட்டு இந்த மூன்றெழுத்துக்கு ஆளாகி இருக்க வேண்டாம்.

**எனவே**

என்ற மூன்றெழுத்தைப் போட்டு 'முடிவு' என்ற மூன்றெழுத்துக்கு வருவதானால் 'காப்பி' என்ற மூன்றெழுத்து பாதி, 'பழசு' என்ற மூன்றெழுத்து பாதி — அதுதான் ''மூன்றெழுத்து!'' இதுதானா தமிழ்ப் படத்தின் தலையெழுத்து?

# பயணம் செய்யும்போது, கவலையற்றிருக்க, பாங்க் ஆஃப் பரோடாவின் பிரயாணிச் செக்குகளை எடுத்துச் செல்லுங்கள்!

THE BANK OF BARODA LIMITED

பணம் திணித்திருப்பதனால் கொழுத்திருக்கும் மணிபர்ஸ் திருடர்களுக்குத் தூண்டுகோல். உங்கள் கவலைக்குக் காரணம்.

இரண்டையும் தவிர்க்க, அடுத்த முறை தொழில் சம்பந்தமாகவோ உல்லாசத்திற்கோ பிரயாணம் செய்யும்போது, பாங்க் ஆஃப் பரோடா பிரயாணிச் செக்குகளை எடுத்துச் செல்லுங்கள்!

பாங்க் ஆஃப் பரோடா பிரயாணிச் செக்குகள் ரூ. 25, ரூ. 50, ரூ. 100 மற்றும் ரூ. 250 ஆகிய வசதியான இனங்களில் கிடைக்கின்றன.

இந்தியா முழுவதிலும், முதன்மையான பாங்குகள், ஓட்டல்கள் அல்லது டிபார்ட்மெண்ட் ஸ்டோர்களில் கட்டணமின்றி அவற்றிற்குப் பதிலாக ரொக்கப் பணம் பெற முடியும். உங்கள் கையொப்பம் இருந்தால்தான் பாங்க் ஆஃப் பரோடா பிரயாணிச் செக்குகளின் மீது பணம் பெற முடியும். எனவே அவை தொலைந்து விட்டாலோ என்ற கவலையே இல்லை.

என்றென்றும் வளமையுடன் வாழ உங்களுக்கு உதவுகிறது

**தி பாங்க் ஆஃப் பரோடா லிமிடெட்**

நிறுவனம்: (1908) ரெஜிஸ்டர்ட் ஆபீஸ்: மாண்ட்வி, ப

இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் 300க்கு மேற்பட்ட கிளைகள் உள்ளன.

உங்களுக்கு அருகாமையிலுள்ள கிளையிலிருந்து 'பிரயாணத்தில் பத்திரம்பசலியாக இருக்காதீர்கள்' என்னும் பிரசுரத்தை இலவசமாகப் பெற்றுக்கொள்ளுங்கள்.

Shilpi BOB 4A














# அண்ணாவிடம் சொன்னதென்ன?

திரு சி. என். அண்ணாதுரை அவர்கள் அமெரிக்காவிலும் ஜப்பானிலும் பல இடங்களுக்குச் சென்று பார்த்தார். பார்த்த இடங்களைப் பற்றிய தமது அபிப்பிராயத்தைக் கூறி இருக்கிறார். ஆனால் அவரால் பார்க்கப்பட்ட பல முக்கிய இடங்கள் அல்லது காட்சிகள் பேச முடியுமானால் அவை அண்ணாவிடம் புன்னகையைத் தருவிக்கும் விதத்தில் என்ன சொல்லியிருக்கும்? எங்கே பென்சிலையும் காகிதத்தையும் எடுத்துக் கொண்டு வேடிக்கையாக எழுதிப் பாருங்கள்! எங்கள் கற்பனையை 57ம் பக்கத்தில் தந்திருக்கிறோம்.











# 200 இட்லி... 5 நிமிடங்களில்!



எம். சி. ராஜா மாணவர் விடுதியில் சமையல் ;யாராகிறது.

“கிஷ்ணாயில்! ..... கிஷ்ணாயில் வேணுமா அம்மா?”

“வேண்டாம்பா!”

தண்ணீரில் எரியும் அடுப்பு இருக்கையில் மண்ணெண்ணெய் எதற்கு? தண்ணீர் ஒரு எரி பொருளா? ஆம்; கொதிக்கும் எண்ணெயில் நீரைத் தெளித்தால் படபடவென்று பொரிந்தவாறு தீப்பற்றி எரிகிறதல்லவா? எரியும் வைக்கோற் போரின் மீது நீரை ஊற்றினால் தீயின் வேகம் கடுமையாவதைக் காண்கிறோம். இந்த அடிப்படையில் உருவானதுதான் தண்ணீர் அடுப்பு. மீதேன் (Methane) வாயு எரிபொருளாகப் பயன்படும் இந்த அடுப்பை 1958ம் ஆண்டிலேயே உருவாக்கினார் திரு என். பழநியாண்டி. ஆனால் இன்று வரை தம் பெயரை வெளியிடவேயில்லை. காரணம்....?

“‘இதென்ன செப்பிடு வித்தையா?’ என்று என்னிடம் கேட்டார் ஒரு முனிசிபல் கமிஷனர். பொதுமக்கள் சந்தேகப்படுவது இயல்புதானே? புதிய கண்டுபிடிப்புக்கள் எதுவாக இருந்தாலும் எடுத்த எடுப்பில் மக்கள் நம்பி விடுவார்களா? எத்தனையோ விஞ்ஞானிகள் அரிய சாதனைகளை நிகழ்த்திவிட்டு, பலரது ஏச்சுக்கும் கேலிக்கும் ஆளாகி வேதனைப்பட்டிருக்கிறார்கள். டெலிவிஷன்காரர்கள் இதனைப் பதிவு செய்த பிறகுதான் என் பெயரை வெளிப்படுத்தத் துணிந்தேன். இந்த அடுப்பைப் பயன்படுத்தினால் மக்கள் இப்போது எரிபொருளுக்காகச் செலவிடும் தொகையில் எண்பது சதம் மிச்சம் பிடிக்கலாம்.

நந்தனம் எம். சி. ராஜா மாணவர் விடுதியில் இப்போது இந்த அடுப்பை உபயோகித்துப் பயனடைகிறார்கள். இவ் விடுதியில் சுமார் 200 இட்டிலிகள் ஐந்து நிமிடங்களில் தயார் செய்துவிடலாம். 1500 பூரிகள் பொரிக்கச் சுமார் 40 நிமிடங்கள்தான் பிடிக்கிறது. அப்பளம் இடுவதுபோல் மாவைப் பூரிகளாகத் தயார் செய்து வைத்துக் கொண்ட பிறகு அடுப்பைப் பற்ற வைக்க வேண்டும். இல்லாவிடில் தீ விரயமாகும். எம். சி. ராஜா மாணவர் விடுதியில் இந்த அடுப்பை இயக்குவதற்கென அரசு ஒரு நபரை நிரந்தரமாக வேலைக்கு அமர்த்தியுள்ளது. பெரிய நிறுவனங்களில் இதனை உபயோகித்தால் வேலை வாய்ப்புக்கள் பெருகும்” என்கிறார் திரு பழனியாண்டி.

“விறகு, கரி இவைகளுக்காக லட்சக்கணக்கில் மரங்களை வெட்டித் தள்ளிவிடுகிறார்கள். ஆனால், பதிலுக்குப் புதிய மரங்களைப் பயிர் செய்வதில்லை. மரங்கள் வெட்டப்படுவதால் மழை குறைகிறது. அடுப்புக்கு விறகு உபயோகிப்பதைக் குறைத்தால், மரங்கள் பிழைக்கும். மழை பொழிந்து நாட்டின் சுபிட்சம் பெருகும். இந்த வகையிலும் இது ஒரு லாபந்தானே?” என்று கேட்கிறார் திரு பழனியாண்டி. இந்த அடுப்பின் பேடண்ட் உரிமையை அவர் வைத்துக் கொண்டிருந்தாலும், இதனைத் தயாரித்து மக்களுக்குக் குறைந்த விலையில் கிடைக்கும்படி செய்ய யார் முன்வந்தாலும் தாம் உதவத் தயாராய் இருப்பதாகக் கூறுகிறார்.

இவருடைய படிப்பு, குடும்ப விவரம் முதலிய தகவல்களை இவர் வெளியிட விரும்பவில்லை. “என்னைப் பற்றிய செய்திகள் மக்களுக்கு ஏன் தெரியவேண்டும்? என் கண்டுபிடிப்பைப்பற்றி அவர்களுக்குத் தெரியவேண்டியதுதான் முக்கியம்” என்கிறார் திரு பழநியாண்டி. —பாணன்





திரு பழனியாண்டி தயாரித்த விநோத அடுப்பு

## 29. பாசுபதம்



# மகாபாரதம்
## ராஜாஜி

**வ**னவாச ஆரம்பத்தில் பீமசேனனும் திரௌபதியும் சில சந்தர்ப்பங்களில் தர்மபுத்திரனோடு வாதாடுவார்கள். கோபமே க்ஷத்திரியனுக்கு லட்சணம் என்றும், க்ஷத்திரியனுக்குப் பொறுமை தகாது என்றும், அது அவமானத்தில் முடியும் என்றும், பெரியோர் வாக்குகளையும் நியாயங்களையும் பிரமாணமாகக் காட்டி பீமசேனனும் ★பாஞ்சாலியும் வாதிப்பார்கள். தாம் செய்த பிரதிக்ஞையைக் காப்பாற்றியே தீர வேண்டும். அனைவருக்கும் பொறுமையே மேலான தருமம் என்று, யுதிஷ்டிரன் உறுதியாகப் பதில் சொல்லுவான். வனவாசத்தை நிறைவேற்றாமலே, உடனே துரியோ



தனைத் தாக்கி அவனையும் அவன் துணைவர்களையும் கொன்று ராஜ்யத்தை மீட்க வேண்டும் என்பது பீமனுடைய வாதம்.

"வேத மந்திரங்களைப் பொருள் செய்து கொள்ளாமல் எழுத்தறிவுமட்டும் அடைந்தவன் திருப்பித் திருப்பி மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு திருப்தி அடைவதைப்போல் நீர் பேசுகிறீர். உம்முடைய மதி குழப்பமடைந்திருக்கிறது. க்ஷத்திரியனாகப் பிறந்த நீர் வேறு குலத்தின் தருமத்தை அனுசரிக்கப் பார்க்கிறீர். பிராமணத் தன்மை அடைந்து விட்டீர். இது பயன் தராது. சாஸ்திரம் என்ன சொல்லுகிறது? க்ஷத்திரியனுக்குக் குரூரமும் கோபமும் லக்ஷணம். பொறுமை என்பது க்ஷத்திரியனுக்கு விதித்த குணமல்ல. கெட்ட எண்ணங்களைக்கொண்ட திருதராஷ்டிர புத்திரர்களை வீரர்களாகிய நாம் சும்மா விடலாமா? வஞ்சகப் பகைவரை வெல்லாத க்ஷத்திரியனுடைய பிறப்பு பயனற்றதென்பது என் அபிப்பிராயம். வஞ்சகனைக் கொன்று அதனால் நரகம் அடைந்தாலும் அந்த நரகம் சுவர்க்கத்துக்கு ஒப்பானது. உம்முடைய பொறுமை நெருப்பைக் காட்டிலும் மிக வெப்பமான தாபத்தை உண்டாக்கி என்னையும் அருச்சுனனையும் இரவும் பகலும் தூக்கமில்லாமல் வாட்டுகிறது. நீசர்கள் நம்முடைய ராஜ்யத்தைக் கவர்ந்து கொண்டு அனுபவிக்கிறார்கள். செய்ய வேண்டிய காரியத்தில் பிரவேசிக்காமல் மலைப் பாம்புபோல் செயலற்றுக் கிடக்கிறீர். பிரதிக்ஞையைச் செய்து முடிக்க வேண்டும் என்கிறீர். உலகமெல்லாம் அறிந்த அருச்சுனன் எவ்வாறு உலகத்தாரால் அறியப்படாமல் அஞ்ஞாத வாசம் செய்து முடிக்க இயலும்? இமய மலையை ஒரு பிடி புல்லினால் மறைக்க முடியுமா? சிங்கங்கள் போன்ற அருச்சுனனும் நகுல சகாதேவர்களும் எவ்வாறு மறைந்து

★ பாஞ்சாலி - திரௌபதி.



சஞ்சரிப்பார்கள்? இவ்வாறெல்லாம் முடியாத காரியத்தை நாம் செய்யப் பார்த்தாலும் திருதராஷ்டிர புத்திரன் ஒற்றர்களை உபயோகித்து நம்மை அறிந்து கொள்ளுவான். இது நிறைவேறாத யோசனை. மறுபடியும் பதின்மூன்று வருடங்கள் காட்டில் இருக்க வேண்டி நேரிடும். பிரதிக்ஞையை முடிப்பது ஆகாத காரியம். இப்போது பதின்மூன்று மாதம் நாம் காட்டில் இருந்தாயிற்று. சோமலதை இல்லாதிருந்தால் வேறு தழையை உபயோகித்து யாகம் முடிப்பார்கள். பதின்மூன்று வருஷத்துக்குப் பதில் பதின்மூன்று மாதங்களே போதும். இதற்குச் சாஸ்திரம் உண்டு. வஞ்சத்தில் உண்டான பிரதிக்ஞையைத் தவறினதற்குப் பிராயச்சித்தம் உண்டு. பாரம் சுமக்கும் காளை மாட்டுக்கு ஒரு பிடி புல்லைக் கொடுத்தால் அந்தக் குற்றத்துக்குப் போதுமான பிராயச்சித்தமாகும். சத்துருவை உடனே வதம் செய்வதென்று நிச்சயம் செய்யும். க்ஷத்திரியருக்கு வேறு மேலான தருமம் இல்லை.''

இவ்வாறு பீமன் அடிக்கடி பலமாக விவாதிப்பான். திரௌபதியோ, தனக்குத் துரியோதனனும் கர்ணனும், துச்சாதனனும் செய்த அவமானத்தை எடுத்துச் சொல்லி, யுதிஷ்டிரனும் தயங்கும்படியாகச் சாஸ்திர மேற்கோள் எடுத்துக் காட்டுவான். யுதிஷ்டிரன் பெருமூச்சு விட்டு ஆலோசிப்பான். தருமத்தை உபதேசித்துப் பயனில்லை என்று நீதியையும், பலாபலத்தைப் பற்றியும் எடுத்து உரைப்பான்.

''பூரிசிரவசும், பீஷ்மரும், துரோணரும், கர்ணனும், அசுவத்தாமரும்பகைவனுக்குத் துணையாக இருக்கிறார்கள். துரியோதனனும் அவன் தம்பிகளும் யுத்தப் பயிற்சி பெற்றவர்கள். பல சிற்றரசர்களும், பெரிய ராஜாக்களும் இப்போது துரியோதனன் பட்சத்தில் இருக்கிறார்கள். பீஷ்மரும் துரோணரும் துரியோதனனை மதிக்கவில்லையாயினும் அவனை விட்டுக் கொடுக்க மாட்டார்கள். யுத்தத்தில் அவனுக்காக உயிரையும் விடக் காத்திருக்கிறார்கள். கர்ணன் சாமர்த்தியசாலி. எல்லா அஸ்திரங்களையும் அறிந்தவன். அசைக்க முடியாதவன்; மகாரதன்; அபார முயற்சி எடுக்கும் தன்மை கொண்டவன். யுத்தத்தில் வெற்றி நிச்சயமில்லை. அவசரப்படுவதில் பயனில்லை'' என்று யுதிஷ்டிரன் சொல்லுவான். இவ்வாறு பேசிப் பாண்டவர்களின் பொறுமையைத் தருமபுத்திரன் காப்பாற்றி வந்தான்.

ஃ ஃ ஃ

**பி**றகு வியாசருடைய உபதேசத்தின் மீது புது அஸ்திரங்களையும் தேவர்களின் வரங்களையும் பெறுவதற்காக அருச்சுனன் சகோதரர்களிடம் விடை பெற்றுக் கொண்டு பாஞ்சாலியிடம் சொல்லப் போனான். ''தனஞ்சய! உன்னுடைய காரியம் மங்களகரமாக முடிவு பெற வேண்டும். உன்னைப் பெற்ற குந்தி தேவி நீ பிறந்தபோது உன்னைப் பற்றி என்னவெல்லாம் விரும்பினாளோ, அவற்றையெல்லாம் நீ அடைவாயாக! எங்கள் எல்லோருடைய சுக துக்கமும் வாழ்வும் மானமும் ஐசுவரியமும் உன்னைப் பற்றி நிற்கின்றன. அஸ்திரங்களுடன் திரும்பி வருவாயாக!'' என்று பாஞ்சாலி மங்கள வார்த்தைகள் சொல்லி அனுப்பினாள்.

அருச்சுனன் தவம் செய்யச் சென்றபோது, திரௌபதியின் உள்ளம் தாயின் உள்ளமாகப் பேசிற்று. மனைவியாக இருந்த போதிலும் குந்திக்குப் பதிலாக ஆசீர்வதிக்கும் மொழிகளைச் சொன்

னன். "குந்தி விரும்பிய மங்கள மெல்லாம் உமக்கு ஆகுக" என்று ஆசிர் வதித்தாள்.

ஃ ஃ ஃ

அஸ்திரங்களுக்காகத் தவம் செய்யப்போன அருச்சுனன், அடர்ந்த காடுகளைத் தாண்டி இந்திரகில மலையை அடைந்தான். ஒரு கிழப் பிராமணனைக் கண்டான். "குழந்தாய்! வில்லும், கவசமும், பாணமும், கத்தியும் தரித்துக் கொண்டிருக்கிறாய். நீ யார்? இங்கே அஸ்திரங்களால் செய்யவேண்டியது ஒன்றும் இல்லையே! கோபத்தையும் இன்பங்களையும் விட்ட தவசிகளுடைய இருப்பிடத்தில் இந்த க்ஷத்திரிய வேஷம் என்னத்துக்கு?" என்று சிரித்துக் கொண்டே அந்தத் தவசி அருச்சுனனோடு அன்பாகச் சம்பாஷித்தார். பிறகு தம் உண்மை உருவத்தைக் காட்டி, தாமே இந்திரன் என்றும், தம் மகனுகிய அருச்சுனனைக் கண்டு மகிழவே வந்ததாகவும் தெரிவித்தார்.

அருச்சுனன் இந்திரனை வணங்கி, "நான் வேண்டுவது அஸ்திரங்கள். எனக்கு அதைத் தருவாயாக" என்றான்.

இந்திரன், "தனஞ்சய! அஸ்திரங்களால் என்ன பிரயோசனம்? இஷ்டமான போகங்களைக் கேள். மேலான உலகங்களைக் கேள்" என்றார்.

"தேவராஜனே! நான் போகத்தையும், மேலுலகங்களையும் விரும்பவில்லை. பாஞ்சாலியையும் சகோதரர்களையும் காட்டில் விட்டு விட்டு வந்திருக்கிறேன். நான் கேட்பது அஸ்திரங்களே!" என்றான்.

"முக்கண்ணனுகிய சிவபெருமானைத் தரிசித்துச் சித்தி பெற்றால் உனக்குத் திவ்யாஸ்திரங்கள் கிடைக்கும். மகாதேவனைக் குறித்துத் தவம் செய்" என்று சொல்லி ஆயிரம் கண்ணன் மறைந்தார். அதன் மேல் அருச்சுனன் சிவபெருமானைத் தியானித்து இமய மலைச்சாரலில் நீண்ட காலம் கடும் தவம் செய்தான்.

ஃ ஃ ஃ

பினாகமும் அம்புகளும் கையில் எடுத்துக் கொண்டு பரமசிவனார் உமாதேவியுடன் வேட உருவத்தில் அருச்சுனன் இருந்த காட்டை அடைந்தார்.

அப்போது ஒரு காட்டுப் பன்றி அருச்சுனனைத் தாக்க வந்தது. அந்தப் பன்றியைப் பினாகம் வளைத்த சங்கரனும், காண்டீபம் வளைத்த அருச்சுனனும் ஒரே சமயத்தில் அம்பு எய்து கொன்றார்கள்.

"நீ யார்? ஸ்திரீயுடன் இந்தக் காட்டில் ஏன் சஞ்சரிக்கின்றாய்? நான் குறித்த பன்றியை நீ எவ்வாறு அடிக்கலாம்?" என்று அருச்சுனன் வேடனுகிய சங்கரனை அதட்டிக் கேட்டான்.

"ஓ, வீரனே! மிருகங்கள் நிறைந்த இந்த வனம் காட்டுவாசிகளாகிய எங்களுடையது. நீ சுகத்துக்குரியவனுகத் தோன்றுகிறாய். ஏன் தனிமையாக இந்தக் காட்டில் சஞ்சரிக்கிறாய்?" என்று வேடன் அருச்சுனனை ஏளனமாகப் பேசி, தான் அடித்த பன்றி என்றும், அதை அருச்சுனன் ஒப்புக் கொள்ளாவிடில் தன்னுடன் சண்டை செய்து வெல்ல வேண்டும் என்றும் சொன்னான்.

அருச்சுனனுக்குப் பெரும் கோபம் வந்தது. சர்ப்பம் போன்ற பாணங்களை வேடன் மேல் வருஷித்தான். அந்த அம்புமாரிகள் பரமசிவனுகிய வேடன் மேல் விழுந்து விழுந்து பயனற்றுப் போனதை அருச்சுனன் கண்டான்; நூற்றுக்கணக்கான நாராசங்களை விட்டான். மழையை மலை ஏற்றுக் கொள்வது போல் அவற்றைப் பிரசன்ன முகத்துடன் வேடன் ஏற்றுக் கொண்டான். பாணங்கள் தீர்ந்து போன பிறகு, வில்லின் நுனியால் வேடனைக் குத்தி அடிக்க ஆரம்பித்தான். அதையும் வேடன் பொருட்படுத்தவில்லை. அனாயாசமாக அருச்சுனனிடமிருந்து பிடுங்கிக் கொண்டு வேடன் சிரித்தான். காண்டீபத்தை இழந்த அருச்சுனன் ஒரு நாளும் நடைபெருத தோல்வி, சாதாரண ஒரு காட்டுவாசியிடம் தனக்கு உண்டானதைக் கண்டு திகைத்தான். பிறகு பரபரப்பாகக் கத்தியை எடுத்து யுத்தம் செய்தான். சங்கரன் தலையில் பட்ட கத்தி உடைந்து துண்டு துண்டாயிற்று. பிறகு கற்களை எடுத்து எறிந்து சண்டை செய்தான். அதுவும் பயன் பெறவில்லை. அதன் மேல் முஷ்டி யுத்தம் ஆரம்பித்தான். அதிலும் அருச்சுனன் தோல்வி அடைந்தான். பிறகு ஒருவரையொருவர் தாக்கி மல்யுத்தம் செய்தார்கள். வேடன் அருச்சுனனை மார்போடு மார்பாக இறுகக் கட்டிக் கொண்டு அவனால் ஒன்றும் செய்ய இயலாதபடி செய்தான்.

ஒன்றும் செய்ய முடியாதவனுகித் திகைத்துப் போன அருச்சுனன் பகவான் மகாதேவனைத் தியானித்தான்.

தியானித்தவுடன் அவனுக்கு அறிவு உதயமாயிற்று; வேடன் யார் என்பது தெரிந்தது.

"நான் செய்த குற்றத்தைப் பொறுக்க வேண்டும்!" என்று பரமேசு வரனுடைய காலில் விழுந்து வேண்டிக் கொண்டான்.

"பொறுத்தேன்" என்று சொல்லிச் சிரித்துப் பரமசிவன், அருச்சுனனுக்குத் தாம் பறித்துக் கொண்ட காண்டீபத்தையும் மற்ற ஆயுதங்களையும் தம் கையால் திருப்பிக் கொடுத்து, பாசுபதாஸ்திரத்தையும் வரங்களையும் தந்தார்.

மல்யுத்தத்தில் முக்கண்ணனால் தீண்டப்பட்டதன் பயனாக அருச்சுனனுடைய சரீரம், எல்லாவிதத் தோஷங்களும் நீங்கி முன்னைவிட நூறு மடங்கு தேஜஸ் நிறைந்து பிரகாசித்தது. "நீ சுவர்க்கம் போய் இந்திரனைப் பார்" என்று அருச்சுனனுக்குச் சொல்லி விட்டு, அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே சூரியன் அஸ்தமிப்பது போல் பரமசிவன் மறைந்தார்.

"நேரில் நான் மகாதேவனைப் பார்த்தும் தீண்டியும் அனுபவித்தேனே? இனி எனக்கு என்ன குறை?" என்று அருச்சுனன் மகிழ்ச்சிப் பரவசமாக நின்றான். அப்போது இந்திரனுடைய தேர்ப் பாகன் மாதலி, தேருடன் வந்து நின்றான். அதில் ஏறி அருச்சுனன் இந்திரலோகம் சென்றான்.

## 30. துயரம் புதிதல்ல

**பா**ண்டவர்கள் வனவாசத்திலிருந்த பொழுது ஒருசமயம் அவர்களைப் பார்க்கப் பலராமனும் கோவிந்தனும்* பரிவாரத்துடன் வந்து சேர்ந்தார்கள்.

பாண்டவர்களைப் பார்த்துப் பலராமன் மிக்க துயரப்பட்டுக் கிருஷ்ணனுக்குச் சொல்லலானான்:

"கிருஷ்ணா! தருமமும் அதருமமும் வாழ்க்கையில் பயன்தருவதில்லை போல் தோன்றுகிறது. துரியோதனனைப் பார். பூமியை ஆள்கிறான்: மகாத்மாவான யுதிஷ்டிரன் நாட்டையும் சுகத்தையும் இழந்து காட்டில் இருப்பதையும், துரியோதனனும் அவனுடைய துஷ்ட சகோதரர்களும் விருத்தியடைந்து சுகமாக இருப்பதையும் பார்த்துப் பிரஜைகளுக்கும் கடவுள் நம்பிக்கையே போய் விட்டது. உலகத்தில் தரும அதருமங்களின் பலனைப் பார்த்தால் சாஸ்திரங்கள் தருமத்தைச் சிலாகிப்பது வெறும் பேச்சாகத் தோன்றுகிறது. பூமியாசை கொண்ட திருதராஷ்டிரன் எமன் முன் நிற்கும் போது தன் நடத்தைக்கு என்ன சமாதானம் சொல்லப் போகிறான்; குற்றமற்ற பாண்டவர்களும் யாக வேதியில் பிறந்த பாஞ்சாலியும் வனவாசம் செய்வதைப் பார்த்து, மலைகளும் பூமியுமே துயரப்படுகின்றன!" என்றான்.

பக்கத்திலிருந்த சாத்யகி, "பலராமா! புலம்புவதற்கு அல்ல இது சமயம்! யுதிஷ்டிரர் ஏதும் செய்யச் சொல்லாமலிருந்தாலும் என்ன செய்ய வேண்டுமோ அதை, நாம் காலம் விளக்காமல் செய்ய வேண்டும். நீயும் கிருஷ்ணனும் நம்மைச் சேர்ந்தவர்களும் உயிருடன் உறவினர்களாக இருக்க இந்தப் பாண்டவர்கள் ஏன் வனவாசம் செய்ய வேண்டும்? பந்துக்களாகிய நாம் பாண்டவர்களுக்கு நேர்ந்த கஷ்டத்தை நீக்குவதற்கு அவர்கள் ஏவாமலே முயற்சி செய்ய வேண்டும். நம்முடைய குலத்தாரை ஒன்றுகூட்டித் துரியோதனன் சேனையை யமலோகத்துக்கு அனுப்ப வேண்டும். இந்த வேலைக்கு நீயும் கிருஷ்ணனும் போதும். கர்ணனுடைய அஸ்திரங்களை நொறுக்கி அவன் தலையை வெட்டித் தள்ள ஆசைப்படுகிறேன். துரியோதனாதியரை வதம் செய்து பாண்டவர்கள் இழந்த ராஜ்யத்தை யுத்தத்தில் மீட்டு அபிமன்யுவிடம் ஒப்படைப்போம். பாண்டவர்கள் வேண்டுமானால் வனவாசப் பிரதிக்ஞையை நிறைவேற்றலாம். இதுவே நமக்குப் புகழைத் தரும்படியான காரியம்" என்றான்.

இதையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த வாசுதேவன், "நீங்கள் சொல்வது சரியே. ஆனால் பாண்டவர்கள் தங்கள் கைகளால் ஜெயிக்கப்படாத பூமியை, மற்றவர்கள் சம்பாதித்துத் தருவதை விரும்ப மாட்டார்கள். வீர வம்சத்தில் பிறந்த பாஞ்சாலியும் அவ்வாறே எண்ணுவாள். யுதிஷ்டிரர் பூமிக்கு ஆசைப் பட்டோ அல்லது பிறரைக் கண்டு பயந்தோ தம்முடைய தருமத்தை ஒரு போதும் விடமாட்டார். பிரதிக்ஞை முடிந்ததும் பாஞ்சாலராஜனும், கேகயனும், சேதி ராஜனும், நாமும் ஒன்று சேர்ந்து பாண்டவர்களுக்குத் துணையாக யுத்தம் செய்து பகைவர்களை வதம் செய்வோம்" என்றான். **(தொடரும்)**

* கோவிந்தன், வாசுதேவன் - கிருஷ்ணன்



## அனுபவம் புதுமை

● இந்தப் பக்கத்தில்:

1. லெட்டூஸ் கீரை வகை அறுவடையாகிறது. இந்த இயந்திரம் ஒரு மணி நேரத்தில் ஐந்து ஏக்கர் அறுவடை செய்வதுடன் பறித்த லெட்டூஸைப் பெட்டியில் அடுக்கிக் கொடுத்து விடுகிறது. நேராகக் கடைகளுக்கு வினியோகம் பண்ண வேண்டியதுதான்.

2. உயரமாகத் தோற்றமளிப்பது தானியங்களைச் சேகரித்து வைக்கும் கிடங்கு.

3. விவசாயியின் இல்லமும் மாட்டுப் பண்ணையும்.

○ வலது பக்கம்:

1. சோளம் அறுவடையாகிறது.

# உழைப்பவர் நூற்றுக்கு ஐந்து;

அமெரிக்க ஜனத்தொகையில் நூற்றில் ஐந்து பேர்கள்தான் விவசாயிகள். ஆனால் இவர்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள மக்கள் அனைவருக்கும் போதிய உணவை உற்பத்தி செய்கிறார்கள் என்பது மட்டுமல்ல; உலக ஜனத்தொகையில் பாதி அமெரிக்காவில் விளையும் உணவில் பங்குபெறுகிறது. ஆகவே உழைப்பவர் ஐந்து சதவீதம் என்றும் உண்பவர் நூற்றி ஐம்பது சதவீதம் என்றும் சொன்னால் அது மிகையாகாது என்றே நினைக்கிறேன். (ஒருவேளை இந்தக் கணக்குத் தப்பானால் மன்னிக்க! ஐந்தாவது ஃபாரத்தில் கணக்குப் பரீட்சையில் நான் வாங்கிய மார்க்கு இரண்டு சத வீதம்தான்!) கம்யூனிஸ ருஷ்யாகூட கொள்கைப் பிடிவாதங்களை ஒதுக்கி வைத்து விட்டு அமெரிக்கக் கோதுமையை இறக்குமதி செய்திருக்கிறது!

"அமெரிக்காவில் உற்பத்தியாகும் உணவுப் பொருள்களை நாம் இறக்குமதி செய்வதன் மூலம் அவர்களுக்கு



2. எத்தனை ஏக்கர் நிலமானாலும் உழுது தள்ளி விடும் டிராக்டர்.





# உண்பவர் நூற்றி ஐம்பது!

சி. ராஜேந்திரன்

ரொம்பவும் உதவுகிறோம்; இல்லாவிட்டால் அத்தனை கோதுமையையும் அவர்கள் கடலிலல்லவா கொட்ட வேண்டியிருக்கும்?'' என்று சிலர் பிரசாரம் செய்யுமளவுக்கு அமெரிக்கா ஏராளமான உணவுப் பொருட்களைப் பிற நாடுகளுக்கு அனுப்பி வைக்கிறது. ''ஆண்டவனே! அமெரிக்காவில் நன்றாக மழை பெய்யட்டும்; பயிர் செழிக்கட்டும்!'' என்று மந்திரிகள் பிரார்த்தனை செய்வது போல் கார்ட்டூன் போடுமளவுக்கு அமெரிக்கா நீண்டகாலக் கடனுக்கு உணவை ஏற்றுமதி செய்கிறது.

அரசியலை ஒதுக்கிவிட்டு இந்த அதிசய சாதனையை அமெரிக்கா எப்படி நிகழ்த்துகிறது என்று பார்ப்போம். மிக வளமான பூமியைக் கொண்ட கான்ஸாஸ் மாகாணத்தில் ஒரு விவசாயி தமது காரில் என்னை அவர் வீட்டுக்கு அழைத்துப் போனார். கேட்டுக்குள் கார் நுழையும்போதே 'ஷெட்' கதவு தன்னால் திறந்து கொண்டது. அதற்கு ஓர் எலெக்ட்ரானிக் சாதனத்தைப் பொருத்தியிருக்கிறார்கள். ஷெட்டிலிருந்தபடியே வீட்டுக்குள் போய்விட வழி இருந்தது. வீட்டில் தரையில் பூட்ஸ் அணிந்த காலை வைக்க எனக்குக் கூச்சமாக இருந்தது. அந்தனை உயர்வான ஒரு கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. அவருடைய காரியாலய அறையோ ஏதோ மிகப் பெரிய நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டருடைய அறையைப் போன்று தடபுடலாகக் காட்சி அளித்தது. விருந்தினர் வந்தால் உட்கார்ந்து பேசும் அறையில் எட்டடிக்கு ஆறடி ஒரே கண்ணாடி பதிக்கப்பெற்ற பெரிய ஜன்னல்.

''மாலை நேரங்களில் இங்கே உட்கார்ந்து வயலைப் பார்த்துக் கொண்டிருப்பதில் ஓர் இன்பம்'' என்றார் அவர்.

''உங்கள் வயலின் எல்லை எது?'' என்று கேட்டு வைத்தேன்.

''இங்கிருந்தபடி நீங்கள் எதையெல்லாம் பார்க்கிறீர்களோ—கண்ணுக்கெட்டிய தூரம் வரை அதற்கு மேலும் கூட எல்லாம் என்னுடையதுதான்'' என்றார். தொடர்ந்து, ''சின்னப் பண்ணைகளை வைத்துக்கொண்டிருந்தால் லாபமில்லை. அமெரிக்காவில் வட மேற்குப் பகுதியில் சில சிறிய பண்ணைகள் உள்ளன. அதன் சொந்தக்காரர்கள் ரொம்பவும் சிரமப்படுகிறார்கள். இன்று அமெரிக்காவில் லாபகரமாக விவசாயம் செய்ய ஐந்நூறு ஏக்கருக்குக் குறையாமலும், ஆயிரம் ஏக்கருக்கு மேல் போகாமலும் நிலம் இருக்க வேண்டும்'' என்றார்.

காப்பி அருந்தியபிறகு அவரது கேடிலாக் காரில் ஏறிக் கொண்டு வயல்களைச் சுற்றிவரப் புறப்பட்டோம். வயல் வரப்புக்களின் மீதெல்லாம் கேடிலாக் காரை அனுயாசமாக ஓட்டிக் கொண்டு போனார் அவர். எனக்கு 'ஐயோ!



இவ்வளவு உயர்ந்த காரை இப்படிக் குண்டும் குழியுமான இடங்களில் ஓட்டுகிறாரே!' என்று வேதனையாக இருந்தது.

இடையில் ஓரிடத்தில் நின்றார். "இதோ, இந்த மண்ணைப் பாருங்கள்; எப்படிக் கரேல் என்று உதிரியாக இருக்கிறது பார்த்தீர்களா?" என்று கூறியபடியே காரை விட்டு இறங்கினார். இரண்டு கைகளிலும் மண்ணை அள்ளி எடுத்துப் பிசைந்தார். உதிரவிட்டார். என் கைகளை நீட்டச் சொல்லி அதன் மீதும் உதிர்த்தார். அவர் முகத்தில் பெருமை தாண்டவமாடியது! "அமெரிக்காவிலே உள்ள விவசாய நிலங்களில் மிக உயர்தரமானது இந்தப் பகுதி நிலங்கள்தான்" என்றார்.

மேலே சென்றோம். பல ஏக்கர் நிலப் பரப்பில் சோளம் பயிராகியிருந்தது. அறுவடைக்குத் தயாராகக் கொண்டைகள் கனத்துக் கொண்டிருந்தன. அறுவடை நடந்து கொண்டிருந்தது. ஒரு ராட்சதப் பூச்சி அத்தனை பயிரையும் கபளீகரம் செய்வது போல் ஓர் இயந்திரத்தின் முன் பகுதி அத்தனை சோளப் பயிரையும் விழுங்கியது. உள்ளே என்ன நடந்ததோ, என்ன மாயமோ, பின்புறத்தில் இயந்திரத்துடன் இணைக்கப்பட்டிருந்த டிரக்கில் சோளம் — கதிர்கள் அல்ல, மணிகள் மட்டும் தனியே பிரிந்து வந்து விழுந்து மலையாகக் குவிந்தன. 'டிரக்' நிரம்பியவுடன் அது தன்னால் மேலே உயர்ந்து சாய்ந்தது. அச்சமயம் அங்கு தயாராக வந்து நின்ற லாரியில் எல்லாச் சோள மணிகளும் சரிந்து விழுந்து நிரம்பின. லாரி கிளம்பிச் சென்று விட்டது.

"லாரி எங்கே போகிறது?" என்று கேட்டேன். "இந்தச் சோளத்தையெல்லாம் பன்றிகளுக்கான உணவாகத் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றிருக்கிறது. அதற்கு நாங்கள் இந்த விளைச்சலை விற்றுவிடுகிறோம்" என்றார் அவர்.

அறுவடை இயந்திரத்தின் இயக்கத்தைப் பார்த்துக் கொண்டே நின்றேன். அறுவடை செய்து மணிகளைப் பிரித்தெடுத்த பிறகு தேவையற்ற சோளப் பயிர்ப் பகுதிகளை வயலிலேயே போட்டுவிட்டது. அவற்றை இயந்திரத்தின் இன்னொரு பகுதி பூமியில் புதைப்பது போல் உழுது மண்ணைப் புரட்டி மூடியது. நாளாவட்டத்தில் நல்ல இயற்கை எருவாக மாறிவிடுமல்லவா அது?

"அமெரிக்காவில் விதையை விதைப்பதிலிருந்து தொடங்கி, ஃபோர்க்கையும் கத்தியையும் பயன்படுத்தித் தட்டிலுள்ள உணவை வாயில் போட்டுக் கொள்ளும் வரையில் உணவுப் பொருள்களை யாருமே கையால் தொடுவதில்லை."

அப்படி அவர் கூறக் கேட்டபோது எனக்குக் கல்கி காரியாலயத்துக்கு விஜயம் செய்த ஓர் அமெரிக்கப் பிரமுகருக்கு ஆசிரியர் ஸ்ரீ சதாசிவம் இட்லியை அறிமுகப்படுத்தி வைத்தது ஞாபகம் வந்தது. தமிழ் நாட்டின் தனிப்பெரும் உணவுப் பண்டமாகிய அதை 'அன்டச்ட் பை மிஷின்' (Untouched by Machine) என்று வர்ணித்தார் ஆசிரியர். அதை நினைத்துச் சிரித்தேன் நான். விவசாய நண்பரும் விவரமறிந்து என் சிரிப்பில் கலந்து கொண்டார். பிறகு, "என் அண்ணனைச் சந்திக்க வேண்டாமா நீங்கள்?" என்று கேட்டுக் கொண்டே அறுவடை இயந்திரத்தின் சத்தத்துக்கும் மேலாகக் கூச்சல் போட்டார் நண்பர். உடனே அவருடைய அண்ணன் அறுவடை இயந்திரத்தை நிறுத்தி விட்டுக் கதவைத் திறந்து கொண்டு கீழே இறங்கி வந்தார்.

அறிமுகமான பிறகு, "அப்பாடா, நல்ல வெய்யில் இன்றைக்கு" என்றார் தம்பி.

"ஆமாம், இதுவரை நான் அதைக் கவனிக்கவில்லை" என்றார் அண்ணன்.

"அது எப்படி? வேலையில் அத்தனை லயிப்பா உங்களுக்கு?" என்றேன் அவரைப் பாராட்டும் முகமாக.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இந்த அறுவடை இயந்திரத்தில் டிரைவர் உட்கார்ந்திருக்கும் 'காபின்' பகுதி மட்டும் ஏர் கண்டிஷன் செய்யப்பட்டிருக்கிறது. அண்ணனுக்கு அதனால்தான் வெய்யில் தெரியவில்லை!" என்றார் தம்பி.

"குளுகுளு அறையில் அமர்ந்து உடல் நலுங்காமல் விவசாயமா? நல்ல வேடிக்கை!"

"கரெக்ட்! சரீர உழைப்புக்கு அதிகமான இடமில்லைதான். ஸ்விச்சைப் போட்டு இயந்திரத்தை ஸ்டார்ட் செய்துவிட்டால் எல்லாம் தன்னால் நடக்கும். சரியான சமயத்தில் சரியான காரியத்தைச் செய்ய அநுபவமும் நவீன விஞ்ஞான ரீதியான விவசாயத்துக்கு அறிவும்தான் தேவை! பாருங்களேன், இந்த நூறு ஏக்கர் சோளப் பயிரையும் என் அண்ணன் ஒருவனே அறுவடை செய்து முடித்துவிட முடிகிறதே! இந்த அறுநூறு ஏக்கர் பண்ணையை நிர்வகிக்க நாங்கள் இரண்டே பேர்கள்தான். உதவிக்கு வேறு யாரையும் அழைப்பதில்லை!"

கேடிலாக் காரில் மீண்டும் ஏறிக் கொண்டோம். "இந்தியாவில் பஞ்சம் பற்றாக்குறை என்று அடிக்கடி நாங்கள் கேள்விப்படுகிறோமே? நீங்களும் ஏன் இது மாதிரி விவசாயத்தை இயந்திர மயமாக்கி உற்பத்தியைப் பெருக்கக் கூடாது?" என்றார்.

"இந்தியாவில் நிலவும் பிரச்னைகளும், சூழ்நிலையும் முற்றிலும் மாறுபட்டவை" என்று மலையத்தனை பிரச்னைகளில் தினையத்தனை நான் கூறுவதற்கு முன் எதிரே ஒரு செவர்லே கார் குண்டு குழிகளில் படகு போல் அசைந்தாடிக் கொண்டு வந்தது.

இரண்டு கார்களும் நின்றன. மூவரும் இறங்கினோம். "அப்பா, நீங்கள் இவரைச் சந்திக்க வேண்டும்! இந்தியாவிலிருந்து வருகிறார்!" என்றார் நண்பர்.

அறிமுகம் முடிந்ததும், "இந்தியாவில் விவசாயத் துறையை இயந்திர மயமாக்குவதில் உள்ள பிரச்னைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார்" என்றார்.

"எங்களுக்கு மட்டும் பிரச்னைகள் இல்லையா? அமெரிக்காவில் விவசாயத்தை இயந்திர மயமாக்கியதால் ஏற்பட்ட பிரச்னைகள் இன்னமும் முழுமையாகத் தீர்ந்தபாடாயில்லை. என்னையே எடுத்துக் கொள்ளுங்கள்! நான் குதிரை பூட்டி இதே நிலத்தை உழுதிருக்கிறேன். இன்று இவர்கள் டிராக்டரும்

'கம்பைன்'களும் வைத்துக் கொண்டு உழுவதையும், களையெடுப்பதையும், அறுவடை செய்வதையும் பார்க்கிறேன். பிரச்னைகள் இருக்கத்தான் செய்யும். அதைக் கண்டு பயப்படக் கூடாது! விளைச்சல் பெருக இந்த நாட்களில் ஒரே வழிதான் - அளவில் பெரிதான விவசாயப் பண்ணைகள்; இயந்திர மயமாக்கப்பட்ட விஞ்ஞான ரீதியான விவசாயம்!'' என்றார் தந்தை.

இம்முறையில் பயனும் லாபமும் கண்ணுக்கு மெய்யாகக் கண்டிருப்பதால் அமெரிக்க விவசாயிகள் இதில் தீவிரமான நம்பிக்கை வைத்திருக்கிறார்கள்.

'ஆல்பால்பா' என்ற பசுந் தழையை மாட்டுத் தீவனமாகப் பயிராக்குகிறார்கள். இதை அழுகாமல் வீணாக்காமல் காப்பாற்ற வயல்களுக்குப் பக்கத்திலேயே ஓர் ஆலை இருக்கிறது. அங்கே இந்தப் பசுந் தழைகள் செயற்கை முறையில் உலர்த்தப்படுகின்றன. தேங்குழல் துண்டுகள் போல் ஆனால் பச்சை நிறத்தில் வெளியே வந்து விழுகின்றன. ஈரப் பசை நீக்கப்படுகையில் வைட்டமின்களும் சேர்க்கிறார்கள். உஷ்ணம் காரணமாகப் பசுந் தழை இழந்த வைட்டமினை ஈடு செய்கிறார்கள். வருஷம் முழுதும் மாட்டுத் தீவனமாக இதைப் பயன்படுத்தலாம்.

இன்று அமெரிக்காவில் விதை விதைக்கவும், ரசாயன உரத்தைப் போடவும், பூச்சி மருந்து தெளிக்கவும் எதற்கும் இயந்திரம் தான். களை பிடுங்குவதற்குப் பதில் குறிப்பிட்ட ஒரு மருந்தை உபயோகிக்கிறார்கள். கோதுமைப் பயிருக்குக் களை ஒழிக்கும் மருந்து என்று கேட்டு வாங்கிப் பயன்படுத்தினால் அது கோதுமைப் பயிர் ஒன்றைத் தவிர மற்ற எந்த விதமான பயிரானாலும் முளையிலேயே கொன்றுவிடும். இதனால் ஒரு சிரமம் என்னவெனில் கோதுமை பயிரிட்ட வயலில் அடுத்து வேறு ஒரு பயிரைப் போட்டால் ஒன்றும் விளையாது! ''அதனாலென்ன? சோளத்துக்கென்று கொஞ்சம் நிலப்பரப்பு, கோதுமைக்கென்று கொஞ்சம் நிலப்பரப்பு என்று இவ்வாறு பங்கு பிரித்து ஒதுக்கி விட்டால் போகிறது'' என்கிறார்கள். வெவ்வேறு பயிர்களை மாற்றி மாற்றிப் பயிராக்க வேண்டும் என்ற கொள்கை அங்கு பழையதாகி விட்டது.

விளைந்த தானிய மணிகளைப் பாழாகாமல் சேமித்து வைக்க ஆங்காங்கே விஞ்ஞான ரீதியான நவீன முறையில் அமைக்கப்பட்ட கிடங்குகள் உள்ளன.

அமெரிக்காவிலும் விவசாயப் பொருள்களுக்குக் கொள்முதலும் விலை நிர்ணயமும் உண்டு! எதற்காகத் தெரியுமா? அபரிமிதமான விளைச்சல் காரணமாக விவசாயப் பொருள்களுக்கு மார்க்கெட்டில் மதிப்பில்லை. ஆகவே விவசாயிகளுக்கு நஷ்டம் ஏற்படாமல் இருக்க அரசாங்கம் லாபகரமான ஒரு குறைந்தபட்ச விலையை நிர்ணயித்திருக்கிறது; வாங்கிக் கொள்ளவும் செய்கிறது. குறிப்பிட்ட ஒரு தானியத்தின் கையிருப்பு நாட்டில் மிகுதியாக இருக்குமானால் அந்தத் தானியத்தை விளைவிக்க வேண்டாம் என்று விவசாயிகளை அரசாங்கமே கேட்டுக் கொள்கிறது. அதை விளைவிக்காமல், குறைந்த விலைக்கே விற்கக் கூடிய வேறு ஒருவகை உணவுப் பயிரை விளைவிப்பதால் விவசாயிக்கு ஏற்படும் நஷ்டத்தை அரசாங்கம் ஈடு செய்கிறது!

ஆக, பற்றாக்குறை சில பிரச்னைகளைத் தோற்றுவிக்குமென்றால் அபரிமிதமான விளைச்சலும் வேறு ரகப் பிரச்னைகளைத் தோற்றுவிப்பதைக் கண்டேன்.

அமெரிக்காவின் தென் கிழக்குக் கோடியிலுள்ள ஃபிளாரிடா மாகாணம் ஆரஞ்சுப் பழங்களுக்குப் பிரசித்தி. தென் மேற்குக் கோடியிலுள்ள ஹவாய்த் தீவுகள் பைன் ஆப்பிள், கரும்புப் பயிர்களுக்குப் பேர் பெற்றது. ஃபிளாரிடாவில் மணல்பாங்கான பகுதிகள் மிகுதி. ஆரஞ்சு போன்ற ஸிட்ரஸ் மரங்கள் தவிர மற்றப் பயிர்களும் வளர வகை செய்யப் பல ஏக்கர் மணற்பாங்கான பூமியில் சவுக்கு, பைன் போன்ற மரங்களை நட்டார்கள். சவுக்கு மரத்தின் ஊசி இலைகள் விழுந்து மக்கி, பூமி நாளாவட்டத்தில் வளம் பெற்றுக் கெட்டிப்பட்டும் விட்டது. பிறகு மற்றப் பயிர்களை விளைவித்தார்கள்.

ஹவாய்த் தீவுகளில் ஒரு காலத்தில் விவசாயமே பிரதானமான தொழிலாக இருந்தது. இன்று வியட்நாம் போர் காரணமாக ஹவாய்த் தீவுகளின் முக்கியமான வருவாய் அமெரிக்க ராணுவத்திடமிருந்து கிடைக்கிறது. அதற்கு அடுத்தாற்போல் அதிகமாகப் பணம் பண்ணுவது டூரிஸ்ட் தொழில் தான். விவசாய வருமானம் இன்று மூன்றாவது இடத்துக்கு இறங்கி விட்டது!



சினிமா நட்சத்திரம் ஷீலா கூறுகிறார்:

# 'என் மேனியெழிலுக்கு ஆதரவானது லக்ஸ்

உங்கள் மேனியழகும் முக்கியமானதே;
...அதே பராமரிப்புக்கு உரியது:
ஆம், தூய, மெல்லினம்
லக்ஸ் டாய்லெட் சோப்.
கட்டழகி ஷீலா கூறுகிறார்:
"நாலு வண்ணங்களிலும் வெண்மையிலும்
கம்மென வந்தடையும் சோப் லக்ஸ்
ஒன்றுதான். நறுமணமோ இன்பமயம்!"




## லக்ஸ் டாய்லெட் சோப்

சினிமா நட்சத்திரங்களின்
அழகுசாதன சோப்

லின்டாஸ்-LTS. 319-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு



# இனிக்கும் நினைவுகள்

## 8. "அவள் என் மனைவிதானே?"

நோமகள்

கடந்த ஒரு வார காலமாகவே லிஸ்ஸிக்கு உடல் நிலை சரியில்லை. உட்காருவதும், படுப்பதுமாக நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தாள். மன மூலையில் வேரோடிக் கிடந்த எண்ண முடிச்சுக்கள் கணத்துக்குக் கணம் அவளை வாட்டி எடுக்கும் மன நோயாக மாறிவிட்டன. ராகவன் தன் பரிவாலும், அன்பாலும் அவளுக்குச் செய்து வரும் சௌகரியங்களையும், புரியும் கடமைகளையும் புறம்பாக நின்றே அவள் அனுபவித்து வந்தாள். எதையும் உரிமையோடு பார்க்கவோ, உரிமையோடு அநுபவிக்கவோ இயலாத வேதனை அது. பிறருக்குத் துரோகம் செய்துவிட்டு இரவல் வாழ்க்கையைச் சர்வ சுதந்திரமாக அநுபவிக்கும் அவமானமும் மேலிட்டது. காலையில் எழுந்ததும் தனது முதல் வணக்கத்தைக் கணவனுக்கு வழங்கி விட்டு, காரை எடுத்துக் கொண்டு பீச் ரோடு வரை சென்றுவிட்டு வரும் மலர்ச்சி மிக்க செயல்கள் மறந்து விட்டன. கடந்த இருபதாண்டுகளில் ஒருபோதும் ஏற்பட்டிராத குழப்பம், துளசி சிவியாவின் பிறந்த நாளுக்காக அந்த வீட்டில் அடியெடுத்து வைத்ததிலிருந்து அவள் மனத்தில் உருவாகி விட்டது.

லிஸ்ஸியின் கண்ணுக்குத் தெரிந்து துளசி எப்படியெல்லாம் மாறி உரு வழிந்து விட்டாள்? அன்றலர்ந்த லில்லி மலரைப் போன்ற மென்மையும், அழகும், கவர்ச்சியும் மிகுந்த யுவதியாக நின்ற துளசி முதன் முதலில் ராகவன் லிஸ்ஸியோடு நிற்பதைப் பார்த்து எப்படி முகம் கூம்பிப் போனாள்? அவள் மறுப்பு மாறும் என்று ராகவனும் லிஸ்ஸியும் காத்திருந்தபோது, காலம் காத்திருக்கவில்லை. துளசியின் மறுப்பும் பிடிவாதமும் இளமையைக் காலத்துக்கு இரையாக்கிக் கொண்டிருந்தன. ஒரு பெண்ணுக்கு இத்தனை விம்பும் எதையும் சாதிக்கும் வைராக்கியமும் இருப்பதால் என்ன பயன்? மணந்தவனுக்கே மனைவி; அக்கினியாக நின்றால் பெண் பிறந்த பலன் தான் என்ன? அணைக்க வரும் கணவனிடம் அடைக்கலம் புக எண்ணாத பெண்ணின் அன்பும் பண்பும் எதற்கு உபயோகப்படப் போகின்றன? இப்படிப் பராமுகத்தால் கொண்ட கணவனையே வதைத்து விட்டாளே? வாழ்வறியாதவளா அவள்? தன்னையே கொன்று கொள்ளும் பைத்தியக்காரியாகி விட்டாளே துளசி? லிஸ்ஸிக்கு ஒரு கணம் துளசியின் மீது கோபம் பொங்கியது. ஆனால் அடுத்த விநாடியே பொங்கிய கோபமெல்லாம் மாறிக் கண்ணீராக வெடித்தது.

''லிஸ்ஸி!''

லிஸ்ஸி சட்டெனக் கண்களைத் தலையணையில் புதைத்துக் கொள்ள விரும்பினாள். ஆனால் ராகவனின் விரல்கள் பரிவாக அவள் முகத்தைத் திருப்பின. உவர்க்கோடுகளைக் கண்டதும் அவர் பதறியவாறே, ''வாட் ஈஸ் ராங் வித் யூ?'' என்று அவள் கண்ணீரைத் துடைத்தார்.

''நான் ஒரு பாவி!''

அவளது மெல்லிய முணுமுணுப்பு அவர் காதில் விழுந்திருக்க நியாயமில்லை. லிஸ்ஸி இப்படி ஒரு நாளும் கண்ணீர் விட்டு அழுததில்லை. மிகுந்த தன்னம்பிக்கையும் மனத் திண்மையும் மிக்கவள் அவள். அவளே இப்படி அழுவதானால் ஏதாவது காரணம் இருக்கத்தானே வேண்டும்!

''என்ன லிஸ்ஸி இது? கொஞ்ச நாட்களாகவே நீ ஒரு மாதிரியாக இருக்கிறாய்? என்ன உன் உடம்புக்கு? சிவியாவுக்கு வேண்டுமானால் ஃபோன் பண்ணவா?''

''வேண்டாம். அவள் படிப்புக் கெட வேண்டாம்.''



''போகட்டும். என்னிடம் கூடச் சொல்லாமல் மறைக்கும் உன் துயரம் என்னவாக இருக்கக்கூடும்?''

''எனக்குத் துளசியைப் பார்க்கும்போதெல்லாம் 'பகீர்' என்கிறது.''

துளசி என்ற வார்த்தையைச் செவிமடுத்தாலே ஏதோ ஓர் ஆலயத்தில், எட்டவியலா உயரத்தில் மலர்ந்த மலரைப் பறிக்கும் உணர்வுதான் அவருக்கு ஏற்பட்டது. தொழுவதற்குமட்டுமே உரிய மலரை, கைகளால் பறித்து முகர முடி




யமா? மிகச் சாதாரணப் பெண்ணல்லவே அவள்! நிலவில் குளிக்கும் ஆகாயத் தாமரையைப் போன்ற பிரமிப்பையும், பிரமையையும் ஊட்டி நிற்பவள் ஆயிற்றே! அவள் அதிகம் பேசியதில்லை. ஆனால் ஒன்றிரண்டு சொற்களே பேசினாலும் அவற்றில் உள்ள உறுதியும், ஆணித்தரமும் தடம் புரள முடியாத வலிவோடு தாக்குபவை.

''எனக்கு அதே கவலைதான். துளசிக்கு வாழ்வு கொடுக்க வேண்டுமென்ற அளவிட முடியாத என் ஆவலே...''

''நீயும்தான் கடந்த இருபது வருடங்களாக அதற்கு முயன்றாய். எனவே உன் தவறு அதில் என்ன? சந்தர்ப்பவசத்தால் நேர்ந்த தவற்றை, எந்த விதத்திலாவது போக்க முயலும்போது சம்பந்தப்பட்டவர்கள் ஒத்து வந்தால்தானே? நீயும் நானும் இனியும் என்ன செய்வது?''

''என் முயற்சியை நான் விடப் போவதில்லை. இன்னும் கூட நான் துளசியோடு இது குறித்துப்பேசவிரும்புகிறேன்.''

ராகவன் மெல்லச் சிரித்தார். ''விஸ்வம்! அவள் பண்புக்கும் பணிவுக்கும் உதாரணம் சொல்ல முடியாதவள். நான் ஒரு முறை கூட அவள் அருகில் சென்று நெருங்கி உறவாடியதில்லை என்றாலும் அவள் என் மீது வைத்திருந்த பக்தியை உணர்ந்திருக்கிறேன். இன்றும் கூட அந்தப் பக்திக்கு அவள் மனத்தில் எந்தப் பழுதும் ஏற்பட்

டிருக்க முடியாது. அப்படி யிருந்தும், என் சொல்லுக்கு உட்பட்டு அவள் இந்தக் குடும்பத்தோடு இணைசேரவில்லை. என்னைத் தெய்வமாகத் தொழுது வருபவள், கடந்த இருபதாண்டுகளாக என் அழைப்புக்களை இதயம் கனிந்து ஏற்காதவள், இனி ஒருபோதும் மாறி விடப் போவதில்லை. அதை எண்ணும் துயரத்தை விட்டு விட்டு நீ வழக்கமாக இருந்து வருவதே நல்லது. சீலியாவின் பிறந்த தினத்துக்குத் துளசி வந்தபோது தான் நீ கேட்டாயே! அவள் மௌன மாகச் சென்றதே போதாதா? இதற்கு விளக்கமே தேவையில்லையே! மறுபடியும் மறுபடியும் முயல்வானேன்?''

''இத்தனை நாட்களுக்குப் பின் இப் போது துளசி நம் அழைப்புக்கிணங்கி இங்கு வந்துவிட்டுப் போகவில்லையா? இன்னும் முயன்றால் அந்தக் கனிந்த உள்ளத்தை என்னால் வெற்றி கொண்டு விட முடியும் என்று தோன்றுகிறது. நீங்கள் இப்படியே உட்காருங்கள். நான் துளசியை அழைத்துவரச் சொல்லு கிறேன். இதற்கு ஒரு முடிவு கிட்டிவிடும் என்று என் மனத்தில் படுகிறது.''

''உன் ஆசையை நான் கெடுக்க வில்லை'' என்ற ராகவன் அவள் பக்கத் தில் மற்றொரு ஸ்டூலைத் துளசிக்காக நகர்த்தி வைத்தார்.

லிஸ்லி சமையற்காரி பாக்கியத்தை அழைத்து, துளசி அம்மாளைத் தான் பார்க்க விரும்புவதாகவும், உடம்பு சரியில்லாமல் படுத்திருப்பதாகவும், தயவுசெய்து ஒரு முறை வரும்படி யாகவும் சொல்லி யனுப்பினாள்.

ராகவன் தமக்குள் நகைத்துக்கொண் டார். ஆனால் சற்றும் எதிர்பாராத விதமாகப் பாக்கியம் துளசியோடு திரும்பி வந்தாள். துளசியின் முகத் தில் பரபரப்பு ஓங்கியிருந்தது. ஓடி வந்து, லிஸ்லியின் கைகளைப் பற்றிய வாறே, ''உடம்புக்கு என்ன?'' என்று வினவினாள்.

''முதலில் உட்காருங்கள்!'' என்றாள் லிஸ்லி.

ராகவனைப் பார்த்த துளசி தயங்கிய வாறு அமர்ந்தாள்.

''ஒரு வாரமாக உடல்நிலை சரியில்லை. சொல்லியனுப்ப நினைத்தேன். வருவீர் களோ, மாட்டீர்களோ என்று...''

''நான் வருவதைப் பற்றி ஒன்று மில்லை. ஆனால்... ஆனால்...''

துளசியின் தயக்கம் லிஸ்லிக்கு நம் பிக்கைக் குறைவை யூட்டியது. ராக வனை விநோதமாகப் பார்த்தார். தனக்குள்ளேயே முடங்கிக் கொள்ளும் துளசி இத்தனை தூரம் பேசுவது கூட அவருக்கு விந்தையாகத் தோன்றியது.

லிஸ்லி துளசியின் கைகளைப் பற்றிக் கொண்டாள். ''எனக்கு நாளுக்கு நாள் உடல் நலிந்து வருகிறாற் போலத் தோன்றுகிறது. நான் உங்களிடம் நிறை யப் பேச விரும்புகிறேன். அதற்கு நீங்கள் அநுமதி தருவீர்களா?'' என்று கேட்டாள்.

துளசி குழம்பினாள். சட்டென்று அவளால் பதில் சொல்ல முடியவில்லை.

''நீங்கள் சீக்கிரம் பதில் சொல்ல மாட்டீர்கள் என்பதும் எனக்குத் தெரி யும். ஆயினும் நான் துணிந்தே ஒரு கேள்வி கேட்கப் போகிறேன். நீங்கள் உங்கள் கணவரை மன்னிக்கப் போவதேயில்லையா?''

லிஸ்லி ராகவனைச் சுட்டிக் காட்டிக் கேட்டாள்.

துளசியின் கண்களில் 'குபுக்'கென்று கோத்த நீர்மணிகள் பொட்டுப் பொட் டாக மடி மீது உதிர ஆரம்பித்தன.

''ப்ளீஸ்! நீங்கள் இப்படி அழு வது என் மனத்தை உறுத்துகிறது. இந்தக் கண்ணீரைத் துடைத்து, உங்கள் இருவருக்கிடையே நான் தோண்டி விட்ட அகழியைத் தூர்த்து, நீங்க ளிருவரும் சேர்ந்து சிரிப்பதைக் காண விழைகிறேன் நான்...''

''அப்படி நடக்க வேண்டிய விதி யிருந்திருந்தால் அதற்கு இத்தனை நீண்ட காலம் தேவைப்பட்டிருக்காது.''

துளசி தன் உதடுகளைக் கடித்துத் தன் துக்கத்தை விழுங்க முயன்றாள்.

''பார்த்தீர்களா? உங்களுக்கு அது ஒரு குறையாகத்தானே தேங்கி நிற் கிறது? அதை வெல்லவோ விழுங் கவோ முடியுமா? வீண் விரக்தி யாலும், தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளும் வைராக்கியத்தாலும் உங்கள் கண்ணீரைத் தடுத்து நிறுத்தி விட முடிகிறதா? அது உங்கள் கண வரை நீங்கள் நேருக்கு நேர் பார்த்துச் சிரிக்கும் சிரிப்பில் நின்றுவிடும். அதைத் தான் நான் செய்யச் சொல்கிறேன்.''

துளசி குனிந்தவாறே எதையோ படிப்பதைப் போல் பாவனையிலிருந்த ராகவனைப் பார்த்தாள். அவள் வாயி லிருந்து வரப்போகும் ஒவ்வொரு சொல் லையும் கூர்மையாகக் கேட்கப் போகும் பரபரப்பை அவரிடம் அவள் கண் டாள். இத்தனை வருட வாழ்வில் அவர்கள் இருவரும் இணைந்து இல்லறம் நடத்தி யிருந்தால் வாழ்வு எப்படி எப்படி யெல்லாமோ மாறியிருக்கும். இன்றையச் சூழ்நிலையில் அவர்கள் இருவரும் குழந்தைகளின் கல்வியைப் பற்றியும், பெரிய மகளின் திருமணம் பற்றியும் பேசிக் கொண்டிருக்கலாம். இந்தக் கற்பனை தோன்றியதுமே



# உத்தரவாதம் உள்ளது

- குளிர்ச்சியான காற்றை அளிக்க மிகுந்த சக்தி
- முற்றிலும் ஓசையில்லாத இயக்கம்
- பொறியியல் நுட்பத்திலும் கோளாறற்ற இயக்கம்
- எப்படிக் கோணலாக வைத்தாலும் பக்கத்துக்குப் பக்கம் சமமாக ஆடிச் சுழலும் தன்மை
- இயக்கத்தை இஷ்டம்போல் கட்டுப் படுத்த சுலப மான கண்ட்ரோல்கள். இவை சோதனை செய்து பொருத்தப் பட்டவை மற்றும் பித்தானை அமுக்கி இயக்கக் கூடியவை

ராலிஃபேன்களைப் பற்றிய விவரங்களடங்கிய வண்ண வெளியீட்டை இலவசமாகப் பெற கீழ்க் காணும் கூபனை பூர்த்தி செய்து இந்த விலாசத்திற்கு அனுப்பவும்:

ராலிஸ் இந்தியா லிமிடெட், 21, ரேவலின் ஸ்ட்ரீட், பம்பாய்-1

பெயர்..................................................

விலாசம்..................................................

..................................................

உங்கள் அறைக்கு அணிகலத் திகழ அழகே உருவான ஃபேன் ராலிஃபேன்! இதன் கம்பி வலை, [illegible] நூதன டிசைனில் செய்யப்பட்டது. ராலிஃபேன் நான்கு கண்கவரும் வண்ணங்களில் கிடைக்கிறது: பழுப்புச் சாம்பல், நீலம், பச்சை மற்றும் தந்தம். எடுத்துச் செல்ல வசதியாக இருப்பதற்காக இதற்கு பிரத்தியேக டிசைனில் செய்யப்பட்ட கைப்பிடி உள்ளது. இன்றே எந்த ராலிஃபேன் டீலரையாவது இந்த ஒப்பற்ற மின் விசிறியை இயக்கிக் காட்டச் சொல்லுங்கள்!

தென்றலின் குளுமையூட்டுவது

## ராலி:பேன்

ராலி குரூப்பின் தயாரிப்பு

மறவாதீர்கள்! ஒவ்வொரு ராலிஃபேனுக்கும் 2 வருட உத்தரவாதம் அளிக்கப்படுகிறது

ராலிஃபேன் வகைகளில் உட்படுபவை: சீலிங்ஃபேன், பெடெஸ்டல் ஃபேன், வால் ஃபேன், எக்ஸாஸ்ட் ஃபேன்

நெஞ்சு கனத்தது. 'நாம்தான் தவறு செய்து விட்டோமோ?'

துளசியா தவறு செய்து விட்டாள்? மாதுரியமான அழகும், மிருதுவான உள்ளமும் பெற்றிருந்த காதல் மனைவி துளசி, தொழ வேண்டியவனிடமே தியாக நின்றதால் இன்று உரிமையற்று நிற்கிறாளா? அவள் மனத்தில் கொழுந்து விட்ட அக்கினி இன்னும் கூட அணைய வில்லையா? நடந்ததை நினைத்து வருந்த வேண்டாமென்றாலும், இனி புதிதாக நடப்பதற்குத்தான் என்ன உள்ளது? எதுவுமே இல்லாதபோது எதைத்தான் அநுசரிப்பது?

நீண்ட நேரம் துளசியிடமிருந்து பதிலை எதிர்நோக்கினாள் லில்லி. சுவர்க் கடிகாரம் அரை மணி அடித்து ஓய்ந்தது. சாளரத்தினூடு இரண்டு குருவிகள் சுற்றிச் சுற்றி வந்து கூக் குரலிட்டன. தெருவில் எங்கோ ஓர் ஆட்டோ ரிக்ஷா உறுமிக் கொண்டு ஓடுவது கேட்டது. சமையலறையிலிருந்து விதம் விதமான மணங்கள் மிதந்து வந்தன. அன்று ஞாயிற்றுக் கிழமை என்பதற்கு அடையாளமாக ராகவனின் ஆபீஸ் அறை அடைக்கப் பட்டுக் கிடந்தது.

"என் தலையெல்லாம் பார்த்தீர்களா? எனக்கு நிரம்ப வயதாகி விட்டது."

மெதுவாகத் துளசி முணு முணுத்தாள்.

"உங்களுக்குப் பதினாறு வயதில் திருமணம் நடந்தது. இன்று முப்பத்தி ஆறு வயதாகிறது. இந்த வயதில் கூடத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று காத்திருக்கும் எத்தனையோ பெண்கள் இருக்கிறார்கள். இதை உரிய காலமல்ல என்று வெட்கப்பட்டோ, வேதனைப்பட்டோ தள்ளி விட வேண்டியதில்லை."

லில்லி துளசியை நோக்கினாள். ஆவேசமான எந்தப் பதில் வந்தாலும் உடனே அவர்களை மாற்றிவிடலாம். இப்படி நின்று நிதானித்துப் பேசுகிறவர்களை மாற்றுவது மிகக் கடினம். துளசியின் காந்த விழிகள் புண்பட்ட மானின் விழிகளென மங்கின. "உங்களது இந்தப் பரிவுக்குக் காரணம் என் இளமை பாழானதால் ஏற்பட்ட இரக்கம் என்றே நான் கருதுகிறேன். அதை நான் ஏற்க வேண்டும் என்றால், அதற்கு ஒரே ஒரு பொருள்தான் இருக்க முடியும். நான் என் கடந்த கால ஆசைகளையும், இறந்த கற்பனைகளையும் இந்தச் சாக்கிட்டு ஏற்றுக் கொள்கிறேன் என்பதாகவே கொள்ள வேண்டும்!" என்றாள்.



பைலட்: ராஸ்கல்! விமானம் ஓட்டறது நல்லிடும் பாடம்னு சொன்னியே!
கோ பைலட்: நான் பொய் சொல்லமாட்டேன் சார்!

"இல்லை. கணவனுக்காக நீங்கள் செய்யும் தியாகம்..."

துளசி சிரித்துக்கொண்டாள். "நான் தியாகம் செய்கிறேன் என்று யார் சொன்னது?"

அந்தச் சிரிப்பில் லில்லி திணறி விட்டாள். இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, "உண்மையான தியாகமாயிருந்தால் அது பிறர் மனத்தை நோகஅடிக்கக் கூடாது. தமது தவற்றை உணர்ந்து பரிந்தேற்கக் காத்திருக்கும் உங்கள் கணவரைக் காலமெல்லாம் ஏமாற்றி என்ன சுகம் கண்டீர்கள்? என்னைக் கேட்டால் உங்களை நீங்களே தொலைத்துக் கொண்டு அதற்குக் காரண புருஷராக அவரை ஆக்கி உலகம் தூற்றவும், பழிக்கவும் இடம் தந்து விட்டீர்கள்" என்றாள்.

"அந்தப் பழிக்கு நான் மட்டுமா காரணம்?" என்றாள்.

துளசியின் கேள்வியில் ராகவனின் உடம்பு தூக்கி வாரிப் போட்டது. நீதி தேவதையே எதிரில் நின்று தராசுத் தட்டின் நடு முள்ளைக் கவனிப்பது போலிருந்தது. கோர்ட்டில் எத்தனையோ வழக்குகளை அவர் வென்றிருக்கிறார். வாதம் புரியும்பொழுது அவர் பெரிதும் உணர்ச்சி வசப்பட்டு விடுவார். அதே உணர்ச்சி வசத்தில்தானே லில்லியை மணக்க நேர்ந்தது? அது துளசிக்குத் துரோகமாக முடிந்தது?

'துளசி எத்தனை நிதானமாக, என்ன அழகாக பாயிண்டுகளைப் பிட்டுப் பிட்டு வைக்கிறாள்! கொஞ்சமாவது அவளது பேச்சில் பதற்றமோ அதிர்வோ இருக்கிறதா?'

துளசியின் பேச்சு ராகவனின் சிந்தனையைத் தூண்டி விட்டது. **(தொடரும்)**

# பக்தி இலக்கியம், பார்!

“தியாகராய நகர், ரங்கநாதன் தெருவில்தான் என்ன ஜன நெரிசல்!”

“பின்னே இருக்காதா? வீட்டுக்கு வீடு இருந்த வாசற்படிகளை அடைத்துக் கடைகண்ணி கட்டிக் கொடுக்கும் தர்ம கைங்கரியத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் வீட்டுக்குச் சொந்தக்காரப் புண்ணியவான்கள்! அதோடு மாம்பலம் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகிற — வருகிற வழியாகவும் இருக்கிறது அந்தத் தெரு !”

“அதைச் சொல்லலே, ஐயா !”

“கறிகாய்க் கடைக்காரர்கள் தெருவையே ‘எங்ரோச்’ பண்ணிக் கொண்டிருக்கிறதைச் சொல்லுகிறீர்களா ? — ஐயா, கொல்லன் பட்டறையிலே ஈக்கு என்ன வேலேன்னு கேட்கிறது நியாயம். ஆனால் பலாப் பழக்கடையிலே ஈக்கு என்ன வேலேன்னு கேட்க முடியாதல்லவா ? ஜனங்கள் நடமாடற இடத்திலே இப்படிக் கறிகாயைப் பரப்பினால் நமக்கும் லாபம், அவங்களுக்கும் சௌகரியம்கிற நல்லெண்ணத்திலே தப்புக் கண்டுபிடிக்கிறது துளிக்கூட நியாயம் இல்லே !”

“என் பேச்சைக் காதிலே வாங்கிக்காமல் நீங்கள்பாட்டில் பேசிக் கொண்டு போகிறீர்களே! இந்தக் கிலக வருஷம் பொறந்தாலும் பொறந்தது. ரங்கநாதன் தெரு இன்னும், ‘ஜே,ஜே’ன்னு இருக்கு, ஐயா! காரணம் தெரியுமா?”

“ ‘லிப்கோ’ புத்தகக் கம்பெனியார் தெய்வீகப் புத்தகக் கண்காட்சி நடத்தினதைச் சொல்லுவீங்க தெரியாதா? ஒரு புதுமையான செயல்தான் ; பாராட்ட வேண்டிய காரியம்தான் !”

“பக்தி இயக்கத்திலே பாரத நாட்டுக்கு ஈடு இணையான நாடு இந்தப் புவியிலேயே கிடையாது.”

“நூற்றிலொரு வார்த்தை ! ‘பக்தி ஈந்த பொருள் எத்துணை?’ என்பதைத் தெரிந்து கொள்ள லிப்கோ நிறுவனத்தார் ஏறக்குறைய மூன்று வாரங்கள் நடத்திய தெய்வீகப் புத்தகக் கண்காட்சி பெரிதும் உதவியது!”

“ஒருவன் பொருள் ஈட்டலாம். அதைக் கண்ணால் காணாமலே பாங்கியில் கட்டிவிட்டால், நாம் எத்தனை சொத்துச் சேர்த்துள்ளோம் என்று கற்பனைக் கண் கொண்டு பார்க்கலாமே ஒழிய, சேர்த்த பொருளைக் கண்ணாரக் காணும் மகிழ்ச்சியைப் பெற முடியுமா? நமது நாடு வளர்த்துள்ள பக்திநெறியைக் கண்டு களிக்கும் வாய்ப்பை லிப்கோ நிறுவனத்தார் ஏற்படுத்தினார்கள். இந்தக் காட்சியில் ஏறக்குறைய நாற்பது பதிப்பகத்தார்கள் பங்கு கொண்டார்கள். பக்தி ஆர்வம் கொண்ட ஆயிரக்கணக்கான மக்கள் அன்றாடம் சென்று இந்தக் காட்சியைக் கண்டு களித்தார்கள்.”

“அந்த ஆயிரத்தில் ஒருவன் நானும் ஐயா! மறந்து பேசாதீர்கள்!”

“மறந்து என்ன, மறுத்தும் பேசமாட்டேன்! நீங்களே ஒருசில நூல்களை விலைக்கு வாங்கிப் போனதை நான் என் கண்ணால் கண்டேனே!”

“ஓய் ! ‘நீங்களே’ன்னு ‘ஏ’காரம் போட்டுப் பேசுவதன் பொருள் எனக்கு நன்றாக விளங்குகிறது. உம்மிடம் நாவல்களையும் கதைப் புத்தகங்களையும் இரவல் வாங்கிப் படிக்கிறேனே என்பதைக் குத்திக் காட்டத்தானே இப்படிப் பேசுகிறீர்கள்! நல்ல நூல்களை நான் எப்பொழுதும் பொக்கிஷமாகப் பாதுகாக்கிறவன் ஐயா !”

“எனக்குத் தெரியாதா? நீங்கள் வாங்கிய தேவி மாகாத்மியத்தைப் பார்த்து விட்டுத் தருகிறேன் என்று சொன்னதற்கு இன்னும் தந்துகொண்டிருக்கிறீர்களே!”

“ஓய் ! இந்த மாதிரிப் புஸ்தகங்களைக் காசு கொடுத்து வாங்கிப் படிக்க வேணும், ஐயா! வாங்குகிறவங்க ரொம்பக் குறைச்சல். ஓசி கொடுத்துட்டா விற்பனையிலே ஒரு பிரதி குறைஞ்சிடும் !”

“ ‘லிப்கோ’ வரதனுக்கு வக்காலத்து வாங்கிப் பேசுகிறீரே ! ‘பக்தியைப் பிரசாரம் செய்வதோடு வியாபாரமும் பண்ணவேண்டியிருக்கு!’ன்னார், வருத்தத்தோடு சொல்லவில்லே; மகிழ்ச்சியோடு சொல்லிண்டிருந்தார். ஏனென்றால், தெய்வீகப் புத்தகக் காட்சியைப் பார்த்தவர்கள் ஒன்றிரண்டு புஸ்தகமாவது விலைக்கு வாங்கிண்டுதான் போனார்களாம்! அதனால், ‘ஒவ்வொரு பதிப்பகத்தாருக்கும் கணிசமான தொகைக்குச் செக் போகும். அடுத்தாற்போல் இம்மாதிரிக் காட்சிகள் நடத்தினால் புத்தகங்களை அனுப்பி வைக்கக் கசந்து கொள்ள மாட்டார்கள்’ என்றும் சொல்லிக் கொண்டிருந்தார் !”

“ஏன் சொல்ல மாட்டார் ? பைகளில் கறிகாய் மணக்கத் தெய்வீகப் புத்தகக் காட்சியைப் பார்க்கச் சென்றவர்களைத் தெய்வீக மணம் கமழ அல்லவா திருப்பி அனுப்பிக் கொண்டிருந்தார் ? அதோடு காசு கொடுத்துப் புத்தகம் வாங்கிய மக்களிடம் அழியும் பொருளைக் கொடுத்து அழியாப் பொருளைப் பெற்ற மகிழ்ச்சியும் மிதந்து நின்றதே !”

லிப்கோ பக்தி இலக்கியக் கண்காட்சி



# பொன்னிவனத்துப் பூங்குயில்

அத்தியாயம் 22

## ''அடைக்கலம்தந்த ஐயனார்''

கொத்தமங்கலம் சுப்பு

வேலை செய்யும்போது களைப்புத் தெரிவதில்லை. முடிந்தவுடன்தான் தெரிகிறது. ஆனால் கையில் கூலியை வாங்கியவுடன் களைப்புப் போய்விடுகிறது. அதனால்தான் ''வினையாளை வேலை முடிவில்'' என்றது மூதுரை.

குயிலி நீந்தியது கூலிக்காக அல்ல. தன் உயிரிலும் மேலான ஒன்றைக் காப்பாற்றிக் கொள்ள நீந்தினாள். காப்பாற்றிக் கொண்டும் விட்டாள். ஆனால் அந்தோ பரிதாபம். மரக் கிளையில் ஏறி அமர்ந்தவுடன் தனக்கு வந்த களைப்பில் இந்த உயிரைக் காப்பாற்றிக் கொள்ள இந்தப் பாடு பட்டிருக்க வேண்டாம் என்று அவளுக்குத் தோன்றியது.

''ஆம். என் உயிரின் மேல் யாருக்கு அக்கறை? நான் இருந்தால் என்ன? போனால் என்ன? ஐயோ! போய்விட்டாளே என்று யார் கவலைப்படப் போகிறார்கள்? கை இத்துட்டது. கண்ணை இருட்டுது. காலையோ நீட்டவும் முடியல்லே, மடக்கவும் முடியல்லே. உடம்பு வாழைத் தண்டாட்டம் சில்லிட்டுவிட்டது. கிழிச்ச நார் போல் கிடக்கிறேன். எனக்கு இப்போது ஒரு குவளை தண்ணீர் கொடுக்க யார் இருக்கிறார்கள்? என் தலையைத் துவட்டிவிட யார் இருக்கிறார்கள்? அம்மா? அம்மா?''

குயிலியின் கண்களில் நீர் பொங்கியது. ''அம்மா... அம்மா....அவங்களையும் இந்த வடவாறுதான் ஐக்கியப்படுத்திக் கொண்டது. இந்த மாமன்தான் அவங்க எலும்புகளை அள்ளி ஆற்றில் பூ தூவுவதைப் போல் தூவினார். 'ஓ'வென்று அழுதார். உடனே ஓடிப் போயிட்டார். அக்காள் இறந்த துக்கம் தீரப் பக்கா ஒரு படி கள்ளைக் குடித்து விட்டு இராவில் வீட்டுக்கு வந்தார்.

''கிழவி தரையில் புரண்டு அழுதது. சின்னம்மா தேம்பித் தேம்பி அழுதாங்க. பக்கத்து வீட்டுப் பார்வதியின் அம்மாதான் ரசமும், சோறும் கொண்டு வந்து போட்டாங்க. சாப்பிடறபோது கிழவியும் சின்னம்மாவும், மாமனும் சொன்ன வார்த்தை இன்னும் எனக்கு நினைவிருக்கிறது.

''ரசத்தில் உப்பில்லைன்னாங்க. நான் உப்பு அதிகம் என்றேன். அது உப்பில்லே; உன் கண்ணீர். கண்ணைத் துடை என்று மாமன் அடிக்க வந்தது. அன்றைக்கே எங்க அம்மாவுக்காக அவர்கள் கண்ணைத் துடைத்துக் கொண்டு விட்டார்கள். என் கண்களையும் துடைத்து விட்டார்கள். இந்த உலகமே கண் துடைப்புத்தான். அம்மா! உடம்பெல்லாம் வலிக்கிறதே'' என்று ஒரு நெளி நெளித்துக் கொண்டாள் குயிலி. சாண் ஏற முழம் சறுக்கியது என்பார்கள். குயிலி அவ்வாறு சறுக்கி விழவில்லை. ஆனால் அவள் ஒரு சாண் ஏறினால் அவள் ஏறியிருந்த மரம் ஆற்றில் ஒரு முழம் சறுக்கியது. குயிலி ஆபத்தை உணர்ந்தாள். உணர்ந்தும் பயன் இல்லை. அவளால் நகரவே முடியவில்லை.

''ஐயோ. ஆற்றோடு போயிருக்கலாமே? உலகத்தின் ஓட்டத்தோடு நாமும் ஓட்டி ஓடி இருக்கலாமே. அவன் பிடித்தால் என்ன? அந்தப்புரத்துக்குள் அடைத்தால் என்ன? அனாதைக்கு மானம் என்ன வேண்டிக் கிடக்கிறது? ராணி தங்கக் காப்புப் போட்டால் ஆசை நாயகி வெள்ளிக் காப்பு போடுகிறாள். அவ்வளவுதானே வித்தியாசம். தங்கக் கொலுசு போட்ட ராணியும் தரையில் தான் நடக்கிறாள்; வெள்ளிக் கொலுசு



# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்




அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.

காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் நயமான தயாரிப்பு

CB.6.23 TAM

போட்டவனும் வெந்ததைத்தான் தின்கிறான். இருவருக்கும் விதி ஒன்றுதான். சே, இதற்காக இப்பாடு பட்டு தப்பி இருக்க வேண்டுமா?'' என்று அவன் எண்ணியபோது கிளையைப் பிடித்திருந்த வலக்கரத்தின் விரல்கள் நுவண்டன. சரசரவென்று உடல் சறுக்கியது. ஐயோ! வெள்ளத்தில் மறுபடியும் விழப்போகிறான். ஆனால் அப்போது ஓர் அற்புதம் நிகழ்ந்தது. அவன் மார்புக்குள் ரவிக்கையிலிருந்து ஏதோ மிருதுவான பொருள் ஒன்று அவன் உடல் மீது உராய்ந்தது. அது திடீரென்று அவனது களைப்பைப் போக்கியது. கையில் புதிய வலு ஒன்று பிறந்தது. கிளையை இறுகப் பிடித்துக் கொண்டு இடக்கரத்தை இரவிக்கைக்குள் இட்டு அதை ஆவலுடன் எடுத்தான். அது தான் அந்த ரோஜா இதழ். காற்றில் பறந்து வந்து அவன் கன்னத்தில் ஒட்டிக் கொண்ட அந்த இதழ் இப்போது அவனுக்கு வாழும் ஆசையை ஊட்டியது. 'ராசாவின் ரோசாப் பூவே' என்று அவன் வாய் முணு முணுத்தது. முகத்தில் புன்னகை மலர்ந்தது. மேல் மூச்சு வாங்கிக் கொண்டே, மரத்தின் மீது கிடந்த முந்திரிக் கொட்டையை இழுத்தபடி சரசரவென்று ஆற்றின் தென் கரைக்கு வந்துவிட்டாள், குயிலி. அங்கு சின்னத் தம்பி மல்லாந்து தரையில் கிடந்தான். பாவம். அவனுக்கும் களைப்பு. ''அக்கா, அக்கா!'' என்று தனது உடம்பு தரையில் தட்டியதும், கதறினான் முந்திரிக் கொட்டை.

''அடே சின்னத் தம்பி. இவன் வவுத்தைப் பாருடா. சாலாட்டமா உப்பியிருக்குது'' என்றாள் குயிலி. சின்னத் தம்பி, எழுந்து பார்த்தான் ''தொலையட்டும் விடு அவன் செத்தா ஆறெல்லாம் எலும்பாப் போய்விடுமா?'' என்று சொல்லி விட்டு எழுந்து ஓடினான்.

எங்கிருந்தோ ஒரு வண்டிச் சக்கரத்தைக் கொண்டு வந்தான். குயிலியும் அவனும் சேர்ந்து முந்திரிக்கொட்டையைத் தூக்கினார்கள். அவன் வயிறு வண்டியின் குடத்தில் படும்படி அவனைக் குப்புறப் படுத்து வைத்துச் சக்கரத்தை வேகமாகச் சுற்றினார்கள். குயவனின் திகிரியில் படைக்கப்பட்ட அந்தப் 'பானையை' மறுபடியும் வண்டிச் சக்கரத்தில் வைத்து சுத்தி, வாழ்க்கைப் பாதையில் உருட்டி விட்டார்கள்.

வாயாலும் மூக்காலும் தண்ணீரைக் கொட்டிய முந்திரிக் கொட்டை இப்போது ''தாகம், தாகம், தண்ணி தவிக்கு'' என்று கதறினான்.

''ஏண்டா அப்படி அம்புட்டையும் துப்பினே? கொஞ்சம் வவுத்துல வச்சிருக்கக் கூடாது?'' என்று அவன் தலையில் சின்னத் தம்பி ஒரு தட்டுத் தட்டவே, அவன் மூன்று தும்மல்களைத் தும்மினான்.

''அடே சின்னத்தம்பி! அதோ பாருடா, மானத்திலே சிவப்பாத் தெரியுது...'' என்றாள் குயிலி.

''ராசா ஊர்வலம் போறாரு இல்லே, அதுக்காக வாண வேடிக்கை விடுவாங்க''.

''இல்லேடா. நெருப்பு.''

''இருக்கட்டுமே. வீடு வாச உள்ளவங்களுக்கு அது நெருப்பு. ஏழைக்கு இதுவும் வாண வேடிக்கைதான். குளிர் நடுக்குது. ஈரத் துணி வேறே. வாங்க அங்க போய்க் குளிர் காய்வோம்'' என்றான் சின்னத்தம்பி. குயிலியும், அவனும் தஞ்சை நோக்கி ஓட ஆரம்பித்தார்கள். ''என்னை விட்டுட்டு ஓடாதே, என்னாலே நடக்கவே முடியாது'' என்று அலறினான் முந்திரிக்கொட்டை.

ஓடாமல் நின்றான் சின்னத்தம்பி.

''குயிலி, இங்கே வா. இந்தப் பயலை மறுபடியும் ஆத்திலே தள்ளிடுவோம்.''

அப்போது அவர்கள் எதிரில் மரங்களுக்கிடையே சற்றுத் தொலைவில் சிறிய கோவிலும், அதற்கு எதிரில் இரண்டு வரிசைக் குதிரைகளும் தெரிந்தன. ''இங்க ஏது சின்னத் தம்பி ஐயனார் கோவில்?''

''ஏதுன்னு கேட்டா? அதான் கண்ணு முன்னாலே தெரியுதே. நீ தஞ்சாவூர் ராசா மக. உனக்கு எங்கெங்கே என்ன என்ன இருக்குதுன்னு தெரியுமாக்கும்.''

''வா, அங்கே போய் இந்தப் பயலைக் கொஞ்ச நேரம் தூங்க விடுவோம்'' என்று முந்திரிக் கொட்டையை தன் இரு கைகளிலும் தூக்கிக் கொண்டான் சின்னத்தம்பி.

களைப்பிலே கால்கள் தள்ளாட, கண்களில் உறக்கம் மருட்ட நடந்தனர் இருவரும். தரையைக் கையால் கூட்டி, அங்கிருந்த கல் முள் எல்லாவற்றையும் சுத்தம் செய்து விட்டு, முந்திரிக் கொட்டையை ஐயனார் கோயில் பட்டியல் கல்மேல் படுக்க வைத்தாள் குயிலி.

''அடே, இவன் உடம்பு சுடுதுடா!'' என்றாள்.

''இப்பக் குளுந்த நேரமில்லே. அப்படித்தான் இருக்கும். காலம்பற வெயில் கொளுத்தினா உடம்பு குளுந்து போகும்'' என்று சின்னத்தம்பி சொன்னான்.

''சீ, ஏண்டா துக்குறியாட்டமா பேசறே? அவன் நல்லவண்டா!'' என்




## வாழ்க்கைச் சித்திரம்-6

பூவின் கனவு புலரவும் - ஒரு
புதிய குழந்தை பிறந்தது!
நாவின் கனவு மலரவும் - ஒரு
நளினக் கவிதை சுரந்தது!

வாழ்வின் கனவு வளரவும் - மங்கை
வாசல் இதயம் இறந்தது!
யாவும் கனவாய் முடியவோ. - இன்ப
யாழின் கீதம் அறுந்தது?

— தமிழ்முகன்




றாள் குயிலி. அவள் கண்களில் இருந்து கண்ணீர் கொட்டியது.

"நீயும் நல்லவள்தான் நானும் நல்லவன்தான். அதனால்தான் கஷ்டப்படுகிறோம்" என்று சொல்லி விட்டு, முந்திரிக் கொட்டையின் தலையை இரு கைகளாலும் பிடித்து விட்டான் சின்னத்தம்பி. குயிலி அவன் கால்களை அமுக்கினாள். அந்த அனாதைச் சிறுவன் ராச போகத்தில் கண்ணயர்ந்தான்.

"அடே என் காசைக் காணோம். அத்தோடு போயிட்டுது" என்றாள் குயிலி.

"காசுதானே போச்சு! கை இருக்குதில்லே. பிச்சை வாங்கிப் பிழைச்சுக்கலாம்" என்று சொல்லிக் கொண்டே குறட்டை விட்டான் சின்னத்தம்பி.

குயிலி மேலாடையைப் பிரிந்துவிட்டு அதன் தலைப்பை விரித்துப் படுத்தாள். திடீரென்று எதிரில் நின்ற குதிரைகளில் ஒன்று அசைவதைப் போலிருந்தது. திடுக்கிட்டாள். "டே! சின்னத்தம்பி! ஐயனார் கோயில் குதிரை அசையுதடா" என்றாள். "குதிரை அசைந்திருக்காது. மரத்து நிழல் அசைஞ்சிருக்கும்" என்று அரைத் தூக்கத்தில் உளறினான் சின்னத்தம்பி. குயிலி பயத்தால் கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

**பொ**ழுது விடிய ஒரு ஜாமம் இருக்கும். வடக்கு வாசலில் உள்ள பாராக்காரர்களில் ஒருவன், கொத்தளத்தின் மேல் தனது வலக்கரத்தில் ஈட்டியும் இடக்கரத்தில் விளக்குமாக நடந்து கொண்டிருந்தான். "வாழ்க மன்னவர், வாழ்க மாநிலம். வடக்கு வாயில் காவல் பாரா உஷார்" என்று உரக்கக் கூவினான். அப்போது ஏதோ ஒரு பிராணி கீழே இருந்து தாவி அவன் தோள் மேல் வந்து விழுந்தது. "அரே ராம்" என்று விளக்கைக் கீழே வைத்துவிட்டு இடது கரத்தால் அதைத் தட்டவே, 'சொத்' தென்று அவன் கை அதன் மீது பட்டது. அது ஒரு முதலைக் குட்டி போல் தென்பட்டது. "தூ, சைத்தான்!" என்று அவன் அலறினான். நாம் குளமுமல்ல. கொள்ளிடமுமல்ல. ஆகவே நம் மீது முதலை வர முடியாது. ஆதலால் இது கோட்டை வாசல் காளியம்மனின் பேய்களில் ஒன்றாகத்தான் இருக்க வேண்டும் என்று அவன் உடனே நிச்சயம் செய்து விட்டான். அதற்கு வேறொன்றும் காரணமல்ல. அந்தத் தஞ்சாவூரில் அக்காலத்தில் ராஜா முதல் சிப்பாய் வரையில் அத்தனை பெருக்கும் பெண்டாட்டியைக் காட்டிலும் பேய்களிடத்தில் நம்பிக்கை அதிகம். அவனே உதறினான். அதோடு பயம் வேறு உதற வைத்தது. அப்படி உதறியும் அந்தப் பிராணி விழவில்லை. பேய் பிடிப்பது என்கிறார்களே, அது இப்படித்தான் உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொள்ளுமோ என்று அவன் எண்ணிய போதுதான் அந்தப் பிராணி உடும்பு என்று அவனுக்குத் தெரிந்தது.

இவனுக்காகப் பேய் சும்மா எத்தனை நாழிதான் இருக்கும்? லபக் என்று அவன் கையைப் பிடித்துக் கோட்டைக்கு உள்ளே இழுத்தது. அவன் குப்புற விழுந்தான் கொத்தளத்தை இறுகப் பிடித்துக் கொண்டான். அப்படியும் அந்தப் பிராணி அவனை விடவில்லை. அப்போது ஒருவன் கோட்டையின் உட்புறமிருந்து அந்த உடும்பின் வாலில் கட்டிய நூலேணி வழியாகச் சரசர வென்று மதில் மேல் ஏறி அவன் அருகே வந்தான். அவனைக் கட்டி, வாயில் துணியை அடைத்து அவன் உடையை மாட்டிக் கொண்டான். விளக்கைக் கையில் எடுத்துக் கொண்டு,

அடிக்கடி 'மன்னர் வாழ்க! மாநிலம் வாழ்க! வடக்கு வாயில் காவல் ''பாரா உஷார்!'' என்று கத்தினான். கோட்டையைக் காவல் காத்த வீரர்கள் நால்வரும் ''அடே ஏன் அடிக்கடி கத்துகிறாய்?'' என்றார்கள். 'மன்னவர் வாழ்க' ''தர்வாஜா கோல்'' என்றான் அவன். கோட்டையின் திட்டி வாசற் கதவு திறக்கப்பட்டது. அதன் வழியே உள்ளிருந்து பத்துப் பேர் கைகளில் அணைத்த திவட்டிகளுடன் வெளியே சென்றார்கள். அவனும் படிகளின் வழியே கீழே இறங்கி வந்தான். திட்டி வாசல் வழியே வெளியே சென்று ''பந்த் கரோ'' என்று முன்னைக் காட்டிலும் அதிகமாகக் கம்பீரத்துடன் கூவினான். கதவைப் படாரென்று சாத்தினான் காவலாளி.

''ஏண்டா இவன் குரல் புதுசா இருக்குதில்லே. இவன் யாருடா?'' என்றான் காவலாளி. ''குரலைப் பத்தி நமக்கு என்ன? நமக்குக் குறிப்புச் சொல்தானே முக்கியம்!'' என்றான் அந்தக் கடமை வீரன்.

வெளியே வந்த அந்த ஆள் தன் கூட்டத்தினருடன் சேர்ந்து ராசாகோரி பக்கம் ஓடினான்.

குயிலி அரைத் தூக்கத்தில் இருந்தாள். கோயிலின் முன்னே நின்ற குதிரைகளின் மீது பலபேர் ஏறி உட்கார்ந்தது போலவும் குதிரைகள் உயிர் பெற்றது போலவும் அவளுக்குத் தோன்றியது. மண் குதிரை உயிர் பெற்றதே என்று அவள் நடுங்கிய போது, ''உடையார்பாளையம் காடு'' என்ற குரல் இருளைக் கிழித்துக்கொண்டு ஒலித்தது. குயிலியின் தொண்டை அடைத்தது. நாம் விழித்திருக்கிறோம் என்பதை உணர்ந்தாள். குதிரைகள் வேகமாகப் பறந்தன. அதில் காவல் வீரனின் உடையை அணிந்தவனின் குதிரை வரும் வழியில் குபீரென்று நின்று கனைத்தது. அவன் கீழே தரையை நோக்கித் திரும்பினான். ஆஹா, அந்த விளக்கொளியில் குயிலியைக் கண்டான். ''அச்சா? அழகான பெண்பிள்ளை'' என்று ஏதோ காணாததைக் கண்டது போல் கூவி, குதிரையின் மீதிருந்து

---

சென்னையில் திருட்டுப்பயம் அதிகரித்திருக்கிறது. திருடர்கள் பல வேஷங்களில் வருவதாகச் சொல்லிக் கொள்கிறார்கள். ஆனால் அவர்கள் வேஷம் வெளிப்பட்டு விடும் —

## குட்டு உடை

டாக்ஸி டிரைவர் வேஷம் போட்டவன், ''நீங்கள் எங்கு போகணும்?'' என்று கேட்காமல் இருக்கும்போது.





''மூட்டைக்கு இரண்டணாதானுங்க'' என்று போர்ட்டர் சொன்னால்.

போலீஸ் வேஷம் போட்டவன் பஸ்ஸில் டிக்கட் கேட்கும்போது.



மாணவன் வேஷம் போட்டவன் தொப்புளுக்கு மேலே பாண்ட் (Pant) அணியும்போது.

டாக்டர் வேஷம் போட்டவன், ''ஊசி குத்தத் தேவையில்லை'' என்று சொல்லும்போது.





பால்காரன் வேஷம் போட்டவன், ''நீங்கள் அட்வான்ஸ் கொடுக்கத் தேவையில்லை'' என்று சொல்லும்போது.

— நாடோடி

எழுத்தாளர் வேஷம் போட்டவன் நாடகக் கொட்டகையில் டிக்கட் வாங்கும்போது.



கீழே குதித்து அவளைத் தூக்கக் கைகளை நீட்டினான். ''லீல்'' என்று அலறி னாள் குயிலி. அந்தக் கூச்சலில் அந்தக் கோயிலே எதிரொலி செய்தது. முந்திரிக்கொட்டையும் சின்னத்தம்பியும் உளற ஆரம்பித்தார்கள். கூட்டம் கூடி விடுமோ என்ற அச்சத்தில் அவன் குயிலியை விட்டு விட்டுக் குதிரை மேல் ஏறிக்கொண்டு ஓடினான்.

அவன் ஓடிய பிறகும், குயிலியின் அச்சம் ஓடவில்லை. ''அவன் முகத்தில் தான் என்ன கொடுமை. பசித்த புலியின் பார்வைபோல் அவன் பார்வையில் தான் என்ன பயங்கரம். நெற்றியில் என்ன அம்மைத் தழும்புகளா? அல்லது நெருப்பால் சுட்ட குறிகளா?''

முந்திரிக்கொட்டை பேய் பிசாசு என்று வாய்க்கு வந்தபடி உளறினான். குயிலி அவன் நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள். கனலாகக் கொதித்தது. திடீரென மூச்சு விட்டான். அனல் காற்று அவள் முகத்தில் பட்டது. பொழுது விடியும் நேரத்தில் தான் இதுவரை அவர்கள் படுத்திருந்த இடம் ஐயனார் கோவில் அல்ல, வடக்கு-வாசல் அருகில் உள்ள தஞ்சை அரசர்களின் சமாதிதான் அது என்பது மூவருக்கும் தெரிந்தது. அஞ்சாத சின்னத் தம்பிகூடச் சமாதியில் படுத்திருந்தோம் என்று அறிந்ததும் 'ஐயோ' என்று அலறிவிட்டான்.

சின்னத்தம்பியின் தோள் மீது முந்திரிக் கொட்டை கிடந்தான். அவர்கள் எப்போதும் தங்கும் சிவகெங்கைத் தோட்டத்து மதிலடியில் ஆலமரத்தின் நிழலில் அவனைப் படுக்க வைத்தாள் குயிலி. அவனையே விழித்துப் பார்த்தாள். எங்கிருந்தோ அவனுடைய மற்ற சிஷ்யர்களும் அங்கு வந்து கூடினார்கள். அவர்கள் ஒவ்வொருவர் முகத்திலும் ஒரு சோகக் கதை எழுதியிருந்தது.. அதில் ஒரு பையன் தீயினால் வீடிழந்தவன். மற்றொருவன் தீப்புண் பட்டவன். மேலும் இருவர் ஆற்று வெள்ளத்தில் குடிசை இழந்தவர்கள். எல்லோர் முகத்திலும் பசி என்ற கொடுமை எழுதப்பட்டிருந்தது. குயிலி தன் பசியை மறந்தாள். அவர்கள் ஒவ்வொருவரையும் பரிவுடன் விசாரித்து ஆறுதல் சொன்னாள். அப்போது ''அம்மா அப்பா பேய்....ஏஏஏஏ'' என்று அந்த அனாதை முந்திரிக்கொட்டை புலம்பியதைக் கண்டாள். அனாதைக் குயிலி, யாருமற்ற குயிலி, குடும்பமுடையவள் ஆகிவிட்டாள். அவள் கண்கள் அருவியாகப் பொழிந்தன. யாரைக் காப்பாற்ற நான் வாழ வேண்டும் என்று அப்போது கேட்ட பெண் அநாதை முந்திரிக் கொட்டையைக் காப்பாற்ற வாழ விரும்பினாள். சின்னத்தம்பியை அவனுக்குக் காவலாக வைத்தாள். அந்தப் பையனின் உடம்பு நடுங்கியது. கையையும் காலையும் தூக்கித் தூக்கிப் போட்டு அலட்டிக் கொண்டான். அவன் வாய், ''அக்கா ! அக்கா !'' என்று முணுமுணுத்தது.

''ஜன்னிக் கோளாறு கணக்கா இருக்கு'' என்றான் சின்னத்தம்பி.

குயிலி துடித்தாள்.

''இதோ, வைத்தியரைக் கூட்டிட்டு வரேண்டா. ஒருத்தரும் அழாதீங்க!'' என்று தானே அழுதுகொண்டு சொன்னாள் குயிலி. பாவம் ! ஏழைக் குழந்தைகள் எல்லோரும் அவள் முகத்தைப் பார்த்தனர். பேச்சு வரவில்லை. ஆனால் அவர்கள் கண்ணீரை அவர்களாலும் அடக்க முடியவில்லை. குயிலி விரைந்து சென்றாள்.

''இத்தனை புள்ளைங்க நம்மை நம்பி இருக்கிறதே ! இவுங்களை யார் காப்பாத்தறது? நமக்காவது இவுங்களைவிட நாலு வயசு அதிகம் அச்சு. இவுங்களுக்கு வயசும் அகல்லே. வாழவும் தெரியல்லே. எல்லார் முகத்திலேயும் பால் வடியுது. ஆனால் கண்ணிலே கண்ணீர் வடியுது. அக்கா அக்கான்னு அவுங்க கூப்பிடற அன்பு ஒன்றே போதுமே. தெருவிலே போனாப்பாராக்காரன் விரட்டறான். திண்ணையிலே ஒதுங்கினா வீட்டுக்காரன் விரட்டுறான்.

''அடேயப்பா! அனாதைப் பசங்க என்றால் அத்தனை பேரும் விரட்டுறாங்க'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். அவள் இதயம் பொங்கி வழிந்த கண்ணீரை இரு கைகளாலும் துடைத்துக் கொண்டாள்.

''அனாதையிலும்பெண்ணாப்பிறந்தாக் கேட்கவே வேண்டாம். நேத்து சிப்பாய் விரட்டினான். இது என்ன ஆச்சரியம்! இந்த ஊரிலே பேய்கூடப் பெண்ணை விரட்டுது. அது பேய்தானா? இல்லை, மனிதனா? இது மனிசனாகத்தான் இருக்க வேண்டும்.

''இதை யெல்லாம் பார்த்து விட்டு ஏன் இந்த இளவரசர் கிரீடம் வச்சுக் கிட்டிருக்காரு? பாவம், அவரு என்ன செய்வாரு? ஆற்றை வெட்டுகிறான் ஒருத்தன். ஊருக்கு நெருப்பு வைக்கிறான் ஒருத்தன். என்னென்னமோ அக்குரும்பு செய்கிறாங்க. சரிதான். அரசாங்கம்னால் அது நம்மைவிட மோசமா இருக்கும்போல் இருக்கு'' என்று எண்ணியபடியே நடந்தாள் குயிலி.

(தொடரும்)

# அரவிந்த்



## விதவிதமான துணிகளின் உலகு

SANFORIZED

TERILIZED* AND
TERILIZED DOUBLE TESTED
REGISTERED USERS



அரவிந்த்

மில்ஸ் லிட்./ அகமதாபாத்



LALBHAI GROUP

A-4-69

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: திரு. அஜித்பாய் ஜெயந்திலால் சோமாபாய் படேல் & கோ. 5, கிடங்குத் தெரு, சென்னை. ஏகபோக ஏற்றுமதி ஏஜெண்டுகள்: திரு. லால்பாய் எக்ஸ்போர்ட்ஸ் லிமிடெட், கண்ட்ரக்டர் பில்டிங், நிக்கோல் ரோடு, பல்லார்ட் எஸ்டேட், பம்பாய்—1.



# ஒரு ரூபாய்

சாகுந்தலன்

நான் கடலூர் பஸ் ஸ்டாண்டுக்குள் நுழைவதற்கும், விழுப்புரம் செல்லும் பஸ் ஸ்டாண்டை விட்டுப் புறப்படுவதற்கும் சரியாக இருந்தது.

அவசரம் அவசரமாகக் கண்டக்டரிடம் ''விழுப்புரம்'' என்று சொல்லிக் கொண்டே பஸ்ஸில் ஏறினேன்.

பஸ் கடில நதிப் பாலத்தைக் கடந்து, பாரதி ரோட்டில் சுகமாகச் சென்று கொண்டிருந்தது. விடியற்காலை வேளை. இருள் விலகி, ஒளி மெள்ள மெள்ள ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியிருந்த நேரம்.

விடியற்காலை வேளையாதலால் பஸ்ஸில் நான்கைந்து பேரைத் தவிரக் கூட்டமே இல்லை; தவிரவும் அன்று ஞாயிற்றுக்கிழமை. என்னுடைய நண்பனும், சக ஊழியனுமான ராமச்சந்திரன் விழுப்புரத்தில் இறந்து விட்டான். மாதக் கடைசியாக இருந்தாலும் எங்கேயோ கடன் வாங்கி இரண்டு ரூபாய்ப் பணத்தைப் புரட்டி எடுத்துக் கொண்டு கிளம்பிவிட்டேன். போவதற்கு ஒன்றேகால் ரூபாய். திரும்பி வர யாரிடமாவது அரை ரூபாய் கடன் வாங்கிக் கொள்ளலாம் என்ற தைரியத்தில் கிளம்பி விட்டேன். சுமார் மூன்று வருடங்கள் விழுப்புரத்திலேயே நானும் இறந்துபோன ராமச்சந்திரனும் ஒன்றாக ஒரே ஆபீசில் வேலை செய்திருக்கிறோம். அவன் வீட்டுக்கும் அடிக்கடி போயிருக்கிறேன். நான் போகும்போதெல்லாம் அவன் காப்பி கொடுத்து உபசரிக்காத நாளில்லை. அவன் மனைவியையும், சிறு குழந்தைகள் இருவரையும் எனக்கு நன்றாகத் தெரியும். குழந்தைகள் இருவரும் 'மாமா, மாமா' என்று என்னிடம் மிகவும் ஒட்டுதலாக இருப்பார்கள். அப்படிப்பட்ட உபசரிப்பைப் பெற்றுக் கொண்ட நான், நண்பன் இறந்து போனபோது அவன் மனைவியையும் குழந்தைகளையும் பார்த்து, ஆறுதல் கூறிவிட்டு வராமல், 'மாதக் கடைசியாக இருக்கிறது. சம்பளம் வாங்கியதும் போகலாம்' என்று பேசாமல் போகாமல் இருக்க முடியுமா? தவிரவும் விழுப்புரம் எனக்குப் புது இடம் அல்லவே! யாரிடமாவது அரை ரூபாய் கடன் வாங்கிக் கொண்டால் திரும்பவும் கடலூர் வந்து சேர்ந்து விடலாம் என்ற எண்ணத்தில் அன்று ஞாயிற்றுக்கிழமையாக — லீவு நாளாக வேறு இருந்தாலும், தைரியமாக விழுப்புரம் கிளம்பி விட்டேன்.

பஸ் நெல்லிக்குப்பம் வந்து சேர்ந்தது. சிதம்பரத்தில் நான் ஹெட்கிளார்க்காக இருந்தபோது என்னிடம் கிளார்க்காக இருந்த முருகேசன் யாரிடமோ விடை பெற்றுக் கொண்டே பஸ்ஸில் ஏறி அமர்ந்து கொண்டான்.

அவன் என்னைப் பார்க்காமல் நான் மாத்திரம் எப்படி முதலில் முகமன் தெரிவிப்பது? அப்படி நான் முதலில் பார்த்து முகமன் தெரிவித்துவிட்டால் என் கௌரவம் என்ன ஆவது என்று பேசாமல் இருந்து விட்டேன்.

பஸ் கிளம்பி விட்டது. அவன் பஸ் கடைசியில் பின் சீட்டில் அமர்ந்திருந்தான். நான் டிரைவருக்குப் பின்னால், பஸ்ஸின் முன்புறம் அமர்ந்திருந்தேன். என்னைக் கவனிக்கிறானா என்று பார்க்கப் பின்புறமாகத் திரும்பினேன்.

ஆஹா! அவன் என்னைப் பார்த்து விட்டான்.

''வணக்கம் ஸார்!'' என்றான், கையில் புத்தகத்தை வைத்துக் கொண்டே.

நானும் வணக்கத்தைத் தெரிவித்துவிட்டுச் சாடை மூலம் ''கையில் என்ன புத்தகம்?'' என்று கேட்டேன்.

அவன் புத்தகத்தை உயரத் தூக்கிக் காண்பித்தான். ''இலக்கியம்'' — இவ்வார இதழ் அது. பிரபல நாவலாசிரியர் 'தமிழ் மகன்' இவ்வாரத்தில் தொடர்கதையை எப்படிக் கொண்டு போயிருக்கிறார் என்பதைக் காணவேண்டும் என்ற ஆவல் எனக்கு.

புத்தகத்தை 'பாஸ்' செய்யும்படி சாடை காட்டினேன்.

அவசரம் அவசரமாகப் புத்தகத்துக்குள் வைத்திருந்த பேப்பர்களைக் கையில் எடுத்துக்கொண்டு, பக்கத்தில் இருந்தவரிடம் புத்தகத்தை அவன் கொடுக்க அது கைமாறி என்னிடம் வந்து சேர்ந்தது.

பொருளடக்கத்தின் மூலம் தொடர்கதையின் பக்கத்தைப் பார்த்துப் பிரித்து வைத்துக்கொண்டு படிக்க ஆரம்பித்தேன்.

பலே ஆள்தான் நாவலாசிரியர்! 'தமிழ் மகன்' நடுத்தர வர்க்கக் குடும்பத்தினர் தங்கள் வறுமை நிலையை மறைத்துப் போலி கௌரவத்தையும் மானத்தையும் காப்பாற்றிக் கொள்ளப்படும் கஷ்டங்களையெல்லாம் வெகு சுவையோடு எழுத்தில் வடித்துக் கொடுத்திருந்தார்.

''நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவன் போலி வாழ்க்கை வாழ்கிறான். வறுமை நிலையில் போராடும் கீழ்த்தர மக்களுடன் சேர, அவன் ஒரு போதும் பிரியப்படுவதில்லை. பொருளாதார நிலையில் மேம்பட்ட மக்களின் வாழ்க்கைத் தரத்தைத் தானும் நடத்தி, அம்மக்களின் வர்க்கத்தில் தானும் சேர ஒவ்வொரு நாளும் முயற்சி செய்கிறான். படாடோபமாக உடை அணிவதிலும், அடிக்கடி அவர்கள் கண்களில் படும்படி சினிமா பார்ப்பதிலும், நடந்து வராமல், சைக்கிள் ரிக்ஷா, டாக்ஸி போன்ற வாகனங்களில் பலர் கண்களில் படும்படி வீட்டுக்கு வந்து, இறங்குவதிலும், ரேடியோ, மின் விசிறி வைத்துக் கொண்டிருப்பதாகப் பிறரிடம் பலர் காதுகளில் விழும்படி பெருமையடித்துக் கொள்வதிலும் கடன் வாங்கியாவது செலவழிப்பதில் அவன் தவறுவதில்லை. அதன் பயன் கடன்கள் ஏறி அவன் தலையை அழுத்தப் பொருளாதாரத்தின் கடைசிப் படிக்கு — அவன் விரும்பாமலேயே, — எதை அவன் ஒதுக்கினானோ — அந்த வர்க்கத்துக்கே — தள்ளப்படுகிறான்.

அவன் தன்னுடைய நிலையை உணர்ந்து, படாட்டுக்காகவும், சுய கௌரவத்துக்காகவும் போலிப் பூச்சைக் காப்பாற்றிக் கொள்கிறோம் என்ற அந்த உணர்ச்சி இல்லாமலும், செலவைக் கட்டுப்படுத்தினால் நிச்சயம் அவன் சேமிப்பு உயர்ந்து, பொருளாதார உயர்வு அவனுக்குக் கிடைக்கும்...''

இப்படி அந்த நாவலாசிரியர் தம் எண்ணங்களை அந்த வாரத் தொடர்கதையில் கதாபாத்திரம் வாயிலாக வெளியிட்டிருந்தார்.

''ஆகா! எவ்வளவு உண்மை!'' என்று மனத்துக்குள் சிலாகித்துக் கொண்டேன். விறுகை, கௌரவம் என்று ஏதோ இருப்பதாக நினைத்துக் கொண்டு அதைக் காப்பாற்றிக் கொள்ளத் திரும்பிவரப் போதிய பணம் கூட இல்லாமல் விழுப்புரம் சென்றுகொண்டிருக்கும் எனக்காகவே எழுதப்பட்டிருப்பதாகத் தோன்றியது.

தொடர்கதையை முடித்ததும் அடுத்து ஒவ்வொரு பக்கமாகத் திரும்பிக் கொண்டிருந்தவன், ஒரு பக்கத்தைப் பார்த்தவுடன் திகைத்து மறுபடியும் நோக்கினேன்.

ஆமாம்! அந்தப் பக்கத்தில் ஒரு ரூபாய் நோட்டு ஒன்று இருந்தது. முருகேசன் அவசரம் அவசரமாகத் தாள்களை எடுத்துக் கொண்டு புத்தகத்தை எனக்கு அனுப்பும் போது, இதில் வைத்திருந்த ஒரு ரூபாய்த் தாளை எடுத்துக் கொள்ள மறந்துவிட்டான் போலிருக்கிறது!

சற்று நேரம் அந்த ரூபாய் நோட்டையே பார்த்துக் கொண்டிருந்தேன். எனக்கொரு தைப்பாசை! திரும்பி வருவதற்குப் போதிய பணமில்லாமல் திண்டாடும் நான், ஏன் இந்த ஒரு ரூபாயை எடுத்துக்கொள்ளக் கூடாது?

''சே... ஒரு ரூபாயைத் திருடுவதா?...'' என் மனச்சாட்சி குத்தியது.

விழுப்புரத்தில் யாராவது நண்பர்கள் கிடைப்பார்கள் என்று எதிர்பார்த்துக் காத்திருந்து, அவர்களிடம் சுய மதிப்பை விட்டுக் கேவலம் அரை ரூபாய்க்காகக் கையேந்திக் கொண்டு நிற்பதைவிட இது கௌரவமான முறையல்லவா?

முருகேசனுக்கு இதில் ஒரு ரூபாயை வைத்திருந்தோம் என்று ஞாபகம் இருக்கப் போகிறது? அப்படியே ஞாபகம் இருந்தாலும் பலர் கை மாறி எனக்கு வந்து சேர்ந்திருக்கிற புத்தகம் கைமாறும்போது கீழே விழுந்திருக்கலாமல்லவா? அல்லது யாரேனும் எடுத்துக் கொள்வதற்கும் சந்தர்ப்பம் இருக்கிறதல்லவா? ஆதலால் துணிந்து முருகேசன் என்னை, இந்த ரூபாயைப் பற்றிக் கேட்க முடியாது.

என் மனத்தை நானே சமாதானப்படுத்திக் கொண்டேன். பஸ், பெண்ணையாறு பாலத்தில் அலுங்காமல் குலுங்காமல் சென்று கொண்டிருந்தது. கண் மூடித் திறப்பதற்குள் புத்தகத்தில் இருந்த ஒரு ரூபாய் நோட்டை எடுத்துப் பையில் போட்டுக்

சுதந்திர தேவி சிலை: கால்கடுக்க எத்தனை ஆண்டுகளாய் இப்படி நிற்கிறேன், தெரியுமா? பாவம்! இப்போ நீங்களும் மவுண்ட் ரோடில் இப்படி நிற்க ஆரம்பிச்சிருக்கிறீர்களாமே?

ஜப்பான் புத்தர்: சிக்கலான பிரச்னைகள் எதிர்ப்படும்போது மௌனமாக இருப்பதுதான்மேல்...... அடாடா! இதைச் சொல்லி நான் என் மௌனத்தைக் கலைத்து விட்டேனே!

லிங்கன் சிலை: முதல் மந்திரியான பிறகு அடிக்கடி முகக்ஷவரம் செய்து கொள்கிறீங்களாமே? என்ன அநியாயம்! தமிழ்நாட்டு பெர்னுட்ஷாவான நீங்க என்மாதிரி ஏன் தாடி வளர்க்கக் கூடாது?

நயாகரா நீர்வீழ்ச்சி: என்ன மலைக்கப் போய் நின்னுட்டீங்க? உங்க பேச்சை விடவா நான் ஒசத்தி?

நியூயார்க் கட்டிடம்: ஏக்கப் பெருமூச்சு விட வேண்டாம்! செரி லாரி; இதுக்கு மேலே நீங்க உயர முடியாது: ஆனால் பதவியிலே நீங்க இன்னும் உயரணும்னு தம்பிமார்கள் சிலர் ஆசைப்படறாங்களாமே?

டிவ்லி உலகம்: என்ன இந்தக் கோட்டையைப் பார்த்தவுடன் சென்னைக் கோட்டையின் ஞாபகம் வந்து விட்டதா? அதுதான் மூணுநாள் முன்னதாகவே திரும்பிடறீங்க போலிருக்கு!



கொண்டு விட்டேன். நெஞ்சு படபடவென அடித்துக் கொண்டது. புத்தகத்தைப் பக்கத்தில் இருந்தவரிடம் கொடுத்துப் பழைய முறையிலேயே முருகேசனிடம் சேர்ப்பித்து விட்டேன்.

எனக்கே ஆச்சரியமாக இருந்தது. இந்தக் காரியத்தை எவ்வளவு துணிச்சலாகச் செய்து விட்டேன்? பணமில்லாத சூழ்நிலை மனிதனை எப்படியும் ஆட்டிப் படைக்கும்போலிருக்கிறது.

பஸ்ஸுக்கு வெளியே பார்த்தேன். காலை வெய்யில் 'சுள்'ளென்று முகத்தில் அடித்தது. பச்சைப் பசேலென்ற வயல்கள், வெள்ளியை இழைத்து ஓடவிட்டாற் போன்ற தண்ணீரோடும் சிறு வாய்க்கால்கள். நெடிது உயர்ந்த பனைமரங்கள்.

மனம் எந்த இயற்கைச் சூழ்நிலையிலும் லயிக்கவில்லை. சுற்றிச் சுற்றி ஒரு ரூபாய்த் தாளுக்கே வந்து, குறுகுறுத்துக் கொண்டிருந்தது.

பஸ் விழுப்புரம் வந்தடைந்தது. நான் இறங்கினேன். என் பின்னால் முருகேசனும் இறங்கினான். அரிக்கும் மனத்தைக் தேறுதலாக நீவிவிட்டவாறே, ''என்ன முருகேசன், சௌக்கியமா? இப்போ எங்கே உத்தியோகம்?'' என்று விசாரித்தேன்.

''இப்போ கண்டமங்கலத்திலே இருக்கேன் ஸார்!... நீங்க எங்கே?...''

''என் நண்பன் ராமச்சந்திரன் இறந்து விட்டான்! துக்கம் விசாரிப்பதற்காகப் போகிறேன்!...'' என்று பதில் சொன்னேன்.

''ரிக்‌ஷா வரட்டுங்களா?'' என்று கேட்டவர்களுக்கெல்லாம் 'வேண்டாம்' என்று தலையசைத்துக் கொண்டே நடந்தேன். என் பின்னால் முருகேசனும் தொடர்ந்து வந்தான். என் மனம் 'திக் திக்' கென்று அடித்துக் கொண்டது. எங்கே கையும் மெய்யுமாகப் பிடிபட்டு விடுவோமோ என்ற பயம். சமாளித்துக் கொண்டேன்.

''என்ன முருகேசன்? என்ன விசேஷம்?''

''ஒண்ணுமில்லீங்க! நீங்க தப்பா நினைக்காம இருந்தா ஒண்ணு கேட்கலாம்னு பார்க்கிறேங்க!...''

நான் திடுக்கிட்டு அப்படியே நின்றுவிட்டேன். கால்கள் நிற்கச் சக்தியற்று ஆடின. கடைசியில் பயந்து, பயந்து எதிர்பார்த்ததைக் கேட்டுவிடுவானோ? மனத்தைத் திடப்படுத்திக் கொண்டேன்.

''சொல்லு முருகேசன்'' என்றேன்.

''கண்டமங்கலம் போறதுக்குக் கையிலே காசில்லேங்க! வச்சிருந்த ஒரு ரூவாயையும் தொலைச்சுட்டேன்! ஒரு ரூபா கொடுத்தீங்கன்னா ஊருக்குப் போனதும் அனுப்பிடறேன்...''

என் மனம் உணர்ச்சிக் கடலாக மாறிக் கொந்தளித்தது. உண்மையைச் சொல்லி விடுவோமா என்று யோசித்தேன்.

''பணம் இல்லேன்னா அதனாலே ஒண்ணும் வருத்தம் இல்லீங்க...'' என்றான் முருகேசன்.

''அதெல்லாம் இல்லேப்பா... ஒரு ரூபா தானே!... இந்தா...'' என்று அவன் புத்தகத்திலிருந்து எடுத்த ஒரு ரூபாயையே கொடுத்து விட்டேன். வேறு ஏது என்னிடம் ஒரு ரூபாய், எடுத்துக் கொடுக்க?

''ரொம்ப நன்றிங்க! நாளைக்கு உடனே மணியார்டர் செய்துடறேங்க...'' என்றான் முருகேசன்.

''ஒண்ணும் அவசரம் இல்லே! முதல் தேதி சம்பளம் வாங்கியதும் செலவைப் பார்த்துக்கிட்டு அனுப்பு!'' என்று சொல்லிக்கொண்டே 'தப்பித்தோம், பிழைத்தோம்' என்று வேகமாக நடக்க ஆரம்பித்தேன்.

ஏதோ ஒரு கண்டத்திலிருந்து தப்பித்தது தாக எனக்குத் தோன்றியது.

புதுத் தெருவுக்குப் போய்ச் சேர்ந்து, நண்பனின் வீட்டில் காலடி எடுத்து வைத்தேன்.

நண்பனின் மனைவி சந்திராவைப் பார்ப்பதற்கே எனக்குப் பரிதாபமாக இருந்தது. பாவம். வீட்டுக்கு லட்சணமாகக் இருக்க லட்சுமி என்று சொல்வார்களே அதற்கு இலக்கணமாக எப்படி இருந்தாள்? தெய்வம் அவளை இப்படிச் சிறு வயதிலேயே சோதித்து விட்டதே! சின்னஞ் சிறு குழந்தைகள் இருவர்... அவர்களைப் படிக்க வைத்து, ஆளாக்கி, சமுதாயத்திலே வளரவிடும் பெரும் பொறுப்பு அவள் தலையில் சுமத்து விட்டது.

என்னைக் கண்டதும் பேச நா எழாமல் கண்ணீர் வடித்தாள் சந்திரா. குழந்தைகள் இருவரும் ''மாமா!'' என்று ஓடி வந்து கட்டிக் கொண்டனர். குழந்தைகளின் முகங்கள்! இவர்களை விட்டு விட்டுப் போக அவனுக்கு எப்படி மனம் வந்தது? என்ன வாழ்க்கை...நீர்க்குமிழிபோன்ற வாழ்க்கை... இந்த வாழ்க்கை வாழ்வதற்குத்தான், இதில் கௌரவம், மதிப்பு என்று நாமே ஏற்படுத்திக்கொண்டு, அதற்கு அடிமையாகி, கௌரவத் திருட்டு நடத்த வேண்டியிருக்கிறது! உடல் ஒரு முறை ஆடியது. செக்கு மாடு போல் என் மனம் திரும்பத் திரும்ப அந்தச் சம்பவத்தைச் சுற்றியே வட்டமிட்டது.

''என்னம்மா திடீரென்று இப்படியாகி விட்டதே...'' என்றேன்.

''ஆபீஸிலே பணம் குறையுதுன்னு இவரைச் சந்தேகப்பட்டாங்க! அதாங்க காரணம். மூன்று நாட்களாகச் சாப்பிடாமல் கொள்ளாமல் பித்துப் பிடித்தவர் மாதிரி இருந்தாருங்க. திடீரென்று ஒரு நாள் ராத்திரி ''சந்திரா, நெஞ்சை வலிக்குதே...'' என்று திணறித் திணறிச் சொன்னாருங்க. மூச்சு விடறதுக்கே கஷ்டப்பட்டாருங்க! டாக்டரைக் கூட்டியாறதுக்குள்ளே உயிர் போயிடுச்சி. கடைசியிலே ஆபீஸிலே பணம் ஒண்ணும் குறையலீங்க! யாருக்கோ கொடுத்த பணத்தைச் செலவு அயிட்டத்திலே எழுதாமல் விட்டுவிட்டு...'' விக்கி விக்கி அழுது கொண்டே சொன்னாள். கண்கள் சிவந்து, கோவைப் பழம் போல இருந்தன.

கேட்பதற்கே மிகவும் கஷ்டமாக இருந்தது எனக்கு. எப்படிப்பட்ட உயர்ந்த குணம்! ''மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார்; உயிர் நீப்பர் மானம் வரின்'' என்ற குறளுக்கு ஏற்ப, மனம் குன்றிக் குன்றி உயிரையே அல்லவா தியாகம் செய்துவிட்டான் என் நண்பன். எப்படிப்பட்ட உத்தம நண்பன் அவன்!

# பிரிட்டானியா

# க்ளாக்ஸோ

தேநீர் அருந்தும் வேளைகளில் உங்கள் குடும்பத்தினருக்கு இனிய சுவையுள்ள க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகளை வழங்கி மகிழ்ச்சி அடையுங்கள்! பிரிட்டானியாவின் க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகள் சிறுவர்களுக்கும் பெரியவர்களுக்கும் புஷ்டி தருகின்ற சிற்றுணவாகும். தேநீர், காபி, குளிர்ந்த பானம் ஆகியவை அருந்துகையில் க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகளை வழங்குங்கள்.






## பிரிட்டானியா பிஸ்கெட்டுகள்



© பிரிட்டானியா பிஸ்கெட் கம்பெனி லிமிடெட்



BBC 6497

# 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைண்ட் செய்யப்படுகிறது

## அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்







ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறு எவ்வளவுக் கெவ்வளவு பெரியதாக உள்ளதோ அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவுக் கவ்வளவு நேரமாகிறது. நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவுக்கவ்வளவு காக்க வேண்டியிருக்கிறது.

மைக்ரோஃபைண்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன —எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

இந்தக் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளூ • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டைஅழற்சி • பல்வலி

புதிய மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.

**சாப்பிடும் அளவு:**

**வயது வந்தவர்கள்:** இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.

**குழந்தைகள்:** ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர்சொல்படி

A-C-26-48TM






**புதிய**

**மைக்ரோஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக வலியை வெளியே இழுத்து விடுகிறது.

நிக்கோலஸ் (N) தயாரிப்பு

இடீரென்று என் நெஞ்சில் ஊசியால் குத்தினாற்போல் சுருக்கென்று வலித்தது.

அவனை நண்பனென்று சொல்லிக் கொள்ள எனக்கு என்ன யோக்யதை இருக்கிறது? அப்படிப்பட்ட நண்பன் இறந்ததை விசாரிக்கத் திருடனாக வந்து நிற்கிறேன் நான். உயர்ந்த நண்பனின் மனைவியான அவளை ஏறிட்டுப் பார்க்கவும் வெட்க முற்றேன். அந்த உத்தமனின் ஆவி அங்கு இருக்கிறதோ என்ற அச்சத்தினால் என் உடல் வியர்த்துக் கொட்டியது. கௌரவத் திருட்டு செய்துவிட்டு மலைபோல் உட்கார்ந்திருக்கிறாயே என்று என் மனம் கடல் அலைபோல் முழங்கியது; பேரிரைச்சலிட்டது. எக்காளமிட்டது. இடித்துரைத்தது.

இன்னும் யார் யாரோ துக்கம் விசாரிக்க அங்கு வந்துவிட்டார்கள். கால்கள் தள்ளாட அங்கிருந்து வெளியே நடந்தேன். எங்கெங்கோ சுற்றினேன். மனம் போனபடி நடந்தேன். வெய்யில் கொஞ்சம்கூட உடம்பில் உறைக்கவேயில்லை. நெஞ்சு எரிந்து கொண்டிருக்கும்போது, மனச்சாட்சி கட்டெரித்துக் கொண்டிருக்கும்போது, அதில் நான் வெந்து சாகாமல் செத்துக் கொண்டிருக்கும்போது. இந்த வெய்யில் எம்மாத்திரம்?

மாலை மணி நான்கு இருக்கும். வயிறு புரட்சி செய்தது. ஏதோ ஒரு ஹோட்டலில் நுழைந்தேன். கடலூருக்குத் திரும்பவேண்டும்; அதற்குக் காசு வேண்டும் என்ற நினைப்பே இன்றி ஏதோ ஆகாரம் செய்து முடித்தேன். கையில் கால் ரூபாய் மிஞ்சியிருந்தது.

ஹோட்டலுக்கு அருகில் போஸ்டாபீஸ் இருந்தது. ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை நாலரை மணி முதல் ஸ்டாம்பு முதலியன கொடுக்கிறார்கள் போலிருக்கிறது. கூட்டமாக இருந்தது. மனத்தில் பளிச்சென்று ஒரு யோசனை: ஏன்.. முருகேசனுக்கு நடந்ததை விளக்கி மன்னிப்புக் கேட்டு ஒரு கடிதம் எழுதிப் போட்டு விட்டால் என்ன? என் மனமும் இலேசாகும் அல்லவா?

ஏதோ ஒரு வேகத்தில் உந்தப்பட்டு, போஸ்டாபீசுக்குள் சென்று பத்துப் பைசா கவரும், விடுமுறை நாட்களில் கிளியரன்ஸ் எடுக்க அதிகப்படி கட்டணத்துக்கான தபால் தலையும் வாங்கிக் கடிதம் எழுத ஆரம்பித்தேன்.

''அன்புள்ள முருகேசன்,

நடந்த நிகழ்ச்சியை இங்கு விவரித்திருக்கிறேன். என்னை மன்னிக்க வேண்டுகிறேன். உன் புத்தகத்திலிருந்து ஒரு ரூபாயை எடுத்தது நான்தான். விழுப்புரத்திலிருந்து திரும்பக் கடலூர் செல்லக் கையில் போதுமான பணம் இல்லாததால், ஆசையால் உந்தப்பட்டு அன்று பணத்தை எடுத்துக் கொண்டு விட்டேன். இந்தக் கௌரவத் திருட்டுக்கு என்னை மன்னிக்க வேண்டுகிறேன். அன்று உனக்குக் கொடுத்த ஒரு ரூபாய்த் தாள் உன்னுடையதே! திரும்ப எனக்கு அனுப்ப வேண்டியதில்லை.

உன் மன்னிப்பைக் கோரும்

..............''

கடிதத்தை எழுதி முடித்து விலாசத்தை எழுதி ஸ்டாம்பையும் ஒட்டிப் போஸ்ட் செய்துவிட்டு வெளியே வந்தேன். மனம் இப்போது நிச்சலனமாக இருந்தது. கடலூருக்கு எப்படித் திரும்புவது என்ற கவலையே இல்லை எனக்கு.

ரைஸ்மில் சொந்தக்காரர் வேங்கடாசல நாயுடு காரில் அந்தப் பக்கம் வருவதற்கும் நான் போஸ்டாபீசிலிருந்து வெளியே வருவதற்கும் சரியாக இருந்தது.

என்னைக் கண்டதும் அவர் காரை நிறுத்தினார். ''என்ன ஹெட் கிளார்க் ஐயா! சுகமா இருக்கீங்களா? விழுப்புரத்திலே காணுமே? இப்ப எங்கே இருக்கீங்க?'' என்று கேட்டார்.

கடலூரில் இருப்பதாகவும் நண்பர் இறந்து போனதற்குத் துக்கம் விசாரிக்க வந்ததாகவும் திரும்பக் கடலூர் போக வேண்டும் என்றும் சொன்னேன்.

''தங்கமாப் போச்சு! ஏறுங்க வண்டியிலே. நானும் கடலூர்தான் போய்க்கிட்டிருக்கேன்! இன்னி ராத்திரி மந்திரி கடலூருக்கு வர்றாராம்.! டின்னருக்குப் போகணும்...'' என்று சொல்லிக் கதவைத் திறந்தார்.

நான் ஏறி அமர்ந்ததும் கார் கிளம்பியது.

முருகேசனுக்கு மன்னிப்புக் கடிதம் எழுதித் தபாலில் சேர்த்தவுடன் கடவுள் செய்த உதவி எப்பேர்ப்பட்ட உதவி! ஆகா! அதை மறக்க முடியுமா? கடலூர் திரும்ப வேண்டுமே என்று கவலைப்பட்டு, வேதனைப்பட்டு, தவறான முறையில் பணம் சேர்த்த போது மனச்சாட்சி மூலம் தண்டித்த கடவுள், கடலூருக்குச் செல்ல என்ன செய்வது என்ற நினைப்பே இல்லாமல் வெளியே வருபவனுக்கு வாகன வசதியை உடனே செய்து கொடுக்கிறாரே! ''இறைவனுக்குத் தெரியும் யாருக்கு, எப்போது என்ன செய்ய வேண்டும் என்பது! ஆதலால் நீ ஒன்றும் வேண்டுகோள் விடாதே!'' என்று யாரோ எப்போதோ சொன்னது ஞாபகத்துக்கு வந்தது.



# தவருது உபயோகித்தால் போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது

சிறியோர், பெரியோர் யாவரிடமிருந்தும் தாமாகவே தேடி வந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும் தடுப்பதிலே போர்ஹான்ஸ் பற்பசையின் வியக்கத்தக்க வெற்றியைப் போற்றுகின்றன. இந்த நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

"உங்கள் தயாரிப்பான போர்ஹான்ஸ் பற்பசையை நான 18 ஆண்டுகளாக விடாது உபயோகித்து வருகிறேன். முன்பு...என் பற்களும் ஈறுகளும் மிக மோசமான நிலையிலிருந்தன. உதாரணமாக பயோரியாவும் பற்சிதைவும் சேர்ந்து எனக்கு வயிற்று வலியையும் சங்கடத்தையும் ஏற்படுத்தின... என் பற்களும் ஈறுகளும் கடந்த 18 ஆண்டுகளாக உன்னத நிலையில் இருந்து வருகின்றன—முற்றிலும் எல்லாம் போர்ஹான்ஸ பற்பசையின் செயலே".

—சங்கர் கே. கும்பார், பம்பாய்.

"கடந்த மூனறு மாதங்களாக எனக்குப் பல் கோவு மற்றும் ஈறு வலியால் அவதி. உங்களுடைய போர்ஹான்ஸ் பற்பசையை நான் உபயோகிக்க ஆரம்பித்த பிறகு, என் பற்கள் அதி வெண்மையாக மின்னுகின்றன. பல்வலியோ, ஈறு வலியோ இல்லை".

-என். சங்கர், ஆரணி.

## போர்ஹான்ஸ்

### பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

பற்களைத் தக்கமுறையில் பராமரிக்க இரவிலும், காலையிலும் போர்ஹான்ஸ் பற்பசையையும், போர்ஹான்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத் பிரஷையும் உபயோகியுங்கள்.... உங்கள் பல் வைத்தியரையும் தவருது பார்த்து வாருங்கள்!




இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற வண்ணப் புத்தகம். தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் கிடைக்கும். இப்புத்தகத்தைப் பெற, (தபால் செலவுக்காக) 10 பைசா தபால் தலைகளை இக் கூப்பனுடன் அனுப்புங்கள்: மானேர்ஸ் டென்ட்டல் ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1.

K 6

பெயர் ____________________

விலாசம் ____________________

____________________

மொழி ____________________

DS 3-202 TAM

விளையும் பயிர்

# அவசரக் கோலம்

"ஏலே! இன்னும் பள்ளிக்கூடத்துக்குப் புறப்படல்லே?"

"இதோ புறப்பட்டுட்டேன் அப்பா!"

"என்டா! இலையிலே சாதம் வைச்சு எத்தனை நேரம் ஆகிறது! நீ சாப்பிடப் போறதில்லையா?"

"இதோ வந்துவிட்டேன், அம்மா!"

"என்னடா இது! புத்தகம் பூரா மசி?"

"பேனாவுக்கு மசி போட்டேன், அம்மா!"

"பேனாவுக்கா, புத்தகத்துக்கா?"

எதிலும் அவனுக்கு அவசரக் கோலம் தான்! சாப்பிடும் பொழுது பாதிக் கவளம் வாய்க்குப் போகும், பாதிக் கவளம் பூமிக்கு வரும். விழுங்கும் பொழுது விழி பிதுங்கும்! சாப்பிட்டோம் என்று பெயர் பண்ணுவதற்குள் பள்ளிக்கூடத்து மணி அடித்துவிடும். வேட்டியைச் சரியாகக் கட்டிக் கொள்ளக் கூடப் பொழுது இராது அவனுக்கு. இடுப்பு வேட்டியை ஒரு கையால் பிடித்துக்கொண்டு இன்னொரு கையால் புத்தகத்தையும், சிலேட்டையும் தூக்கிக் கொண்டு ஓட்டமும் நடையுமாகப் பள்ளிக்கூடம் போவான், மூச்சு வாங்க.

வகுப்பில் போய் உட்கார்ந்ததும், "எடுத்துக் கொள்ளுங்கள், சிலேட்டை! எழுதுங்கள் டிக்டேஷனை!" என்பார் உபாத்தியாயர்.

சிலேட்டுக் குச்சியோ பென்சிலோ தேடினாலும் கிடைக்காது. எப்படிக் கிடைக்கும்? புறப்படுகிற அவசரத்தில் வீட்டிலேயே மறந்து வைத்து விட்டால்? மலங்க மலங்க விழிப்பான். உபாத்தியாயர் அவன் விழி பிதுங்க உட்கார்ந்திருப்பதைக் கண்டு, 'என்னடா, சிலேட்டுக் குச்சியோ பென்சிலோ கொண்டு வரவில்லையா?" என்று கடிந்து கொள்ளுவார்.

"சார், அவசரத்தில் மறந்துவிட்டேன், சார்!" என்று கையைப் பிசைவான். இப்படி ஒரு நாளா, இரண்டு நாளா?

என்ன திட்டினாலும் திருந்தினால்தானே? அப்பா, அம்மா, உபாத்தியாயர் எல்லோருக்குமே அவன் ஒரு பிரச்னையாகி விட்டான். அவனுடைய அவசரத்தையும் மறதியையும் எப்படித் திருத்துவது என்று யாருக்குமே புரியவில்லை.

இப்படியிருக்கும்பொழுது தான் ஒரு நாள் அவன் சித்தப்பா ஊரிலிருந்து வந்தார். அவர் கையில் பளபளவென்று ஒரு பொருள் மின்னியது. அது 'டிக்,டிக்' என்று அடித்தது. அதைப் பார்த்துப் பார்த்து அவன் வியந்தான். அதே நேரம் அவன் பெற்றோர் அவன் அவசரக் கோலம் அள்ளித் தெளிக்கும் கதையைச் சித்தப்பாவிடம் சொன்னார்கள்.

"என்டா, விசு! இப்படியா செய்கிறாய்?" — பரிவோடு கேட்டார் சித்தப்பா.

அவனுக்கு வெட்கமாகி விட்டது. தலை குனிந்து நின்றான்.

"இதோ, பார்! நான் கையில் கட்டிக் கொண்டிருக்கும் பொருளை உனக்கே உனக்குத் தருகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. இதன் சொற்படி நீ நடக்கணும்!" என்றார் சித்தப்பா.

"இது பேசுமா?"

"ஓ! இதன் பேச்சையும் செயலையும் புரிந்து கொள்ள உனக்குத் தெரிந்திருக்க வேண்டும். இதன் பெரிய முள்ளும் சிறிய முள்ளும் சுற்றிச் சுற்றி வந்து சோம்பாமல் தங்கள் காரியத்தைச் செய்கின்றன. இவற்றைப் பார்த்து நீ மணி, நிமிஷம் முதற்கொண்டு கணக்காகத் தெரிந்து கொள்ளலாம். உன் காரியங்கள் அனைத்தையும் குறித்த நேரத்துக்குள் முடித்துக் கொள்ள நீ முயல வேண்டும். ஒரு விநாடியைக்கூட வீணடிக்கக் கூடாது. இந்தக் கடிகாரம் உனக்கு உற்ற தோழனாக்கும்!" என்றார் சித்தப்பா.

"சரி, சித்தப்பா!" என்றான் பையன் மகிழ்ச்சியுடன். அவனது மகிழ்ச்சியை அந்தக் கணமே இரட்டிப்பாக்கினார் அவன் சித்தப்பா. ஆம், தமது கையில் இருந்த கடிகாரத்தை அவன் கையில் கட்டினார்.

அன்று முதல் அந்தக் கடிகாரத்தில் கண்ணாக இருந்து தன் கடமைகளைக் கவனிக்கலானான் பையன். எந்தக் காரியமும் இழுவாக முடியவில்லை. நேரம் தவறாமல் செய்ததால், பொருள்களை மறந்து திண்டாடுவது என்பதெல்லாம் நீங்கியது. நினைத்ததற்கும் மேலாகக் காரியங்களைச் சுலபமாகச் செய்ய முடிந்தது.

சிறு பிராயம் முதற்கொண்டு, கடிகாரத்தை நம்பிக் கணப் பொழுதும் வீணாக்காமல் வாழ்க்கையில் உயர்ந்தவர், வாழ்நாளைக் காலத்துக்கு அடிமையாக்காமல், தமக்குக் காலத்தை அடிமையாக்கிக் கொண்டு வாழ்ந்தவர், யார் தெரியுமா? உலகிற் சிறந்த இன்ஜினீயராக, மைசூர் மாநிலத்தின் வளத்துக்குப் பாடுபட்டு நாட்டுக்குப் பணிபுரிந்த அந்த மகான் வேறு யாரும் இல்லை. பூரணாயுசு வாழ்ந்த பாரத ரத்தினம் மோட்ச குண்டம் ஸ்ரீ விசுவேசுவரய்யா அவர்கள்தான்! — ரா. வீ.



ஸ்ரீ விசுவேசுவரய்யா

சிறப்புச் சிறுகதை:

# இருளாயி!

"துரோணன்"

''தூ — பொம்பிளே! உனக்கு எத்தினி வாட்டி சொல்றது? உனக்குத் தோதா இங்கே ஒண்ணும் வேலே கிடையாதுண்ணு காலம் பரவே சொல்லிட்டேனுல்லே? அப்புறம் ஏன் இங்கேயே சுத்திச் சுத்திக்கிட்டு வட்டமடிக்கிறே? வேறே எங்கேனுச்சும் போயிருந்தாலும் ஒண்ணு ரெண்டு சம்பாரிச்சிருக்கலாமே. அதையும் விட்டுட்டு, உழுகிற மாட்டை மேய்கிற மாடு கெடுத்துதாம்பிருப்பலே, இங்கேயே நின்னுக்கிட்டு வம்பா பண்ணிக்கிட்டிருக்கிறே?'' — இவ்வாறு மேஸ்திரிக் கொத்தனார் அவளை நோக்கிச் சீறினான்.

''ஐயாங்களே, உங்களை ரொம்பக் கும்பிடறேனுங்க. மூணு நாளாச்சுதுங்க சாப்பிட்டு. இந்தக் கொளந்தைக்குக் கஞ்சி ஊத்தக்கூடக் காக்காசி இல்லீங்க —'' இவ்வாறு நயந்து பணிந்து வேண்டினாள் அவள்.

''அதுக்கு என்னை என்னா செய்யச் சொல்லுறே ஆத்தா? அந்தப் பிள்ளையைக் குடுத்தவனைக் கொண்டாந்து கட்டி வெச்சு அடி?'' மேஸ்திரி கிழவனிடமிருந்து இந்த வார்த்தை வெளியானதும், அக்கம் பக்கத்திலிருந்து 'பக்'கெனச் சிரிப்பொலிகள் எழுந்தன.

''ஏதோ கடுந்துக்கிட்டாலும் புண்ணியவாங்க இரக்கப்பட்டு வேலே குடுப்பீங்கன்னுதான் நிக்கிறேனுங்க—'' மீண்டும் அவள்.

மேஸ்திரியிடமிருந்து கண்டிப்பான வார்த்தைகள் அதிர்ந்தன: ''த! இப்பிடியெல்லாம் தூங்க வைச்சு, துட்டுக் குடுக்கிற புண்ணியவான் இங்கே யாருமில்லே. இடுப்பு நரம்பைக் கழட்டிக்கிட்டுத்தான் இரண்டு ரூவா சம்பளம் போடுவாங்க இங்கே. உன் நோக்கத்துக்கு இங்கே தோதுப்படாது. பேசாமே வந்த வழியைப் பார்த்துக்கிட்டுப் போ!''

இதற்குப் பின் அவன் வேறுபுறம் திரும்பி, ''அடேய்! யார்ருவன், கதிர்வேலாடா? என்னடா ஒய்யார நடை போட்டீங்க? ஒரு நாழிக்கு ஒரு சட்டி சாந்துகூட மேலே ஏற மாட்டேங்குது?'' என்று சொல்லிக்கொண்டே அப்பால் போனான்.

அவள் பெயர் இருளாயி. பெயருக்கும் உருவத்துக்கும் சம்பந்தமேயில்லை. அதிக வளர்த்தியில்லாமல், குட்டையுமில்லாமல், கச்சிதமான ஐந்தடி உயரம். எண்ணெய் காணாவிடினும் 'கருகரு'வென அடர்ந்து வளர்ந்த குழற்கற்றையை ஊசி போட்டுச் செருகியிருந்தாள். கன்னிப் பருவம் கழிந்து, தாய்மைப் பருவத்தின் முதற்படிக்கு வந்து விட்டவளானாலும், கட்டுக் குலையாத உடல். தளதளப்பான சிவந்த மேனி. பைசா அகலத்தில் உள்ள காது துவாரங்களில் சக்கரம் பதித்தது போன்ற ஓலைச் சுருளைத் தவிர, முகத்தில் அணிவகை எதுவுமில்லை. வெற்றிலைச் சாயமேறிப் பழுத்திருந்த உதடுகளே அவளுக்கொரு தனி அழகையும் அளித்திருந்தது. முழங்கை வரையில் காவிக் கலர் ரவிக்கையும், உடலையொட்டியிருந்த பாசிக் கலர் புடவையும் அவளது வனப்புக்கே மெருகாக அமைந்தன. முன்னங் கைகளில் ஒவ்வொரு கண்ணாடிக் கெட்டிக் காப்பு. கழுத்திலிருந்து முன் பக்கமாகத் தொங்கும் புடவைத் தூளியில் துயிலும் செல்வனை அணைத்தபடி ஒரு கையும், தோள்பட்டையிலிருந்து தொங்கும் ஓலைப் பையைத் தாங்கிய கையொன்றுமாக அவளது தோற்றம் விளங்கிற்று.

அங்கே — ஆணும் பெண்ணுமாக அறுபத்தேழு பேர் கூடி உருவாக்கிக் கொண்டிருந்த நாலடுக்குக் கட்டிடம் முடிவடையும் நிலைக்கு ஆகியிருந்தது. வற்றாத கிணற்றுத் தண்ணீரைச் சேகரித்துக் கொண்டிருந்த டீசல் எந்திரத்தின் பேரிரைச்சல் ஒரு பக்கம்; சிமிட்டிச் சாந்தைக் கலவையிடும் எந்திரத்தின் படபடப்புச் சத்தம் ஒரு பக்கம்; எட்டத்தில் கண்ணாம்பு இடிக்கும் கூலிக்காரப் பெண்களின் முறை வைத்த பாட்டு ஒரு பக்கம் — இப்படிக் காலை எட்டு மணி முதல் மாலை ஆறு மணி வரையில் அந்த வட்டாரமே அமளிப்படும். அதன் பின்னர் அங்கே கூப்பாட்டுக்கும் ஆள் இராது.

இருளாயி நாலு தப்படிகள் தாண்டிப்போய், நாலாபுறமும் பார்த்தபடி நின்றாள். அப்போது அவள் மீது பதிவான சோடிக் கண்கள் அத்தனையும் பலப்பலவாக அவளைப் பற்றிக்



கணக்குப் போட்டன. அதற்கு முக்கிய காரணம், இவ்வளவு கூட்டத்திலும் காண முடியாத அதிசயம்—அவளது சிவந்த மேனி — பரந்த முகம் குறுகுறுப்பான விழிகள்! எங்கேயாவது ஒரு சீமான் வீட்டுப் பிறவியாகவோ, சினிமா நடிகையாகவோ, இருப்பவள்தான், இப்படிக் கூலிக்காரி வேஷத்தில் வந்திருக்கிறாளோ எனச் சில சில உள்ளங்கள் மதிப்பிட்டன. கலியாணம் கட்டி, அனுபவப்பட்டு அலுப்புத் தட்டிவிட்ட ஆண் கட்டைகளின் விழிகளும் கூட, தலைச் சுமை உணர்வின்றி அவளை விழுங்கிக் கொண்டிருந்தன. இளம் வட்டங்களோ, எதிரும் புதிருமாகக் கண்ணிமைப்பாலேயே கதை பேசுமளவுக்குத் துணிச்சலைக் கொண்டு விட்டன. இப்படியெல்லாம் காணாத கட்டை மேஸ்திரி ஒருவன்தான். அவனுக்கு வேலைமேல் குறி. தவிரவும் அறுபது வயதையும் அனுபவங்களையும் விழுங்கிவிட்ட இறுக்கட்டையல்லவா?



சற்று நேரத்துக்கெல்லாம் கணக்குப் பிள்ளை கந்தையா கன வேகமாக மேஸ்திரிக் கிழவன் இருக்கும் இடத்தைத் தேடி வந்தான். அவன் பின்னால் வந்து கொண்டிருந்த இருளாயிக்கு முகத்திலே இறுமாப்பு எக்களித்துக் கொண்டிருந்தது!

''என்ன கொத்தனாரே, இந்தப் பொம்பிளையையும் எங்களுக்கும் புடிச்சுப்போட்டு வைக்கலாமே, பிழைச்சுப் போவட்டும்—'' என்றான் கந்தையா.

கிழவன் சட்டெனத் தன் இரு கைகளையும் கூப்பிக் கொண்டான். ''இங்கே பாருங்க, நான் நல்லா அனுபவப்பட்டவன் சொல்றேன், கேளுங்க. இது வேண்டாம் நமக்கு! காலம்பறப் புடிச்சு இது இங்கே வட்டமிட ஆரம்பிச்சதுலேருந்து, ஒரு பயலாவது ஒழுங்காக வேலையைத் தொடல்லீங்க! கைவேலையைப் போட்டுட்டுப் பல்லே இளிச்சுக்கிட்டு நிக்கிறானுங்க அத்தினி பேரும்!''

இருளாயி, சட்டென நெருங்கி வந்து நின்று கைகூப்பியபடியே, ''எசமாங்களே, நீங்களெல்லாம் இப்படி எதினாச்சும் சொல்லி உதறிவிட்டால் அப்புறம் எங்களைப் போல ஏழைங்கெல்லாம் எப்படிங்க பிழைக்கிறது?'' என்றாள்.

கிழவன் அவளை நோக்கி ஒரே போடாக அதட்டலிட்டான்: ''சீ! ஒன்னைக் கூப்பிட்டுக் கேக்கிறபோது சொல்லு. எசமான் என்னைக் கேக்கிறாரு — நானு பதிலு சொல்றேன். நீ போ எட்டத்துலே!''

கந்தய்யா லேசாகச் சிரித்துக் கொண்டபடி, ''என்னமோ போங்க, ஏதோ பிள்ளைக்காரி பாவம் — பசி, பட்டினின்னு சொல்லுதேன்னுதான் கொஞ்சம் யோசனை பண்ண வேண்டியிருக்குது'' என்றான் சன்னக் குரலில்.

''இங்கே பாருங்க, இதெல்லாம் வணங்கி ஒடுங்கி வேலை செய்யிற கட்டை இல்லீங்க. சம்பாப் பயிரை அழிக்கிறதுக்குச் சாட்டாங் கோரை முளைக்குமே அதுமாதிரித்தான் உலகத்துக்கு இதுகளும்! தோளிலே பாருங்க— தோப்பன் பேரு தெரிய முடியாத பிள்ளை! அவள் கழுத்தைத்தான் பாருங்களேன்— எதுனாச்சும் முறையாக் கட்டினவன் ஒருத்தன் உண்டு என்கிறதுக்கு அடையாளமா, ஒரு மஞ்சள் கயிறு, கருகமணியோ உண்டா? என்னமோ போங்க! இதுக்கெல்லாம் போயி நீங்க இரக்கப்படறீங்க!''

''சரி சரி, ஒண்ணு செய்யுங்க. இரண்டு நாளு பாருங்க. ஒழுங்குப்பட்டு வாராட்டிப் பேசாமே கத்திரிச்சு உட்டுடுங்க — என்னைக் கேக்கவே வேணாம்!''

கிழவன் மலைத்து நின்றான்.

''இப்போ, இங்கே வேலை செய்யிறவங்களாம், தண்ணி குடிக்க, தண்ணி குடிக்கண்ணு சொல்லி அடிக்கடி வெளியே போயிடுறாங்க. திரும்பி வர அரை மணியாவுது! அதுக்காக ஒரு மண் குடத்தையும் குவளையையும் இவகிட்டே குடுங்க; நாலா பக்கமும் போயிப் போயி, கேட்கிறவங்களுக்கெல்லாம் தாகத்துக்குத் தண்ணீர் ஊத்தட்டும்.''

கிழவன் வெடுக்கென நகைத்தபடி, ''சரித்தான் போங்க!'' என்றான் மண்டையை ஆட்டிக் கொண்டு.

கந்தய்யா வியப்புடன், ''ஏன்?'' என்றான்.

''அப்புறம் தாகமே எடுக்காதவனுக்கெல்லாம் நாழிக்கு நாலு தரம் தண்ணித் தாகம் ஏற்பட்டுவிடும்!''

கந்தய்யா முறுவலித்தபடி ''சரி, என்னமோ பாருங்க!'' என்றான் சிரத்தையின்றி. கிழவனின் கருத்தை அவனால் மறுக்கவும் முடியவில்லை.

கிழவன் திரும்பி அவளை நோக்கினான். ''ஏ ஆயி! நீ நல்ல நரி முகத்துலேதான் முழிச்சிட்டிருக்கிறே போ! அதோ, அந்தக் கிடோவிலே சிமிட்டி மூட்டை அடுக்கியிருக்குது பாரு, அங்கிட்டுப் போ. நானு வந்து சொல்றேன்.''

கந்தய்யா திரும்பிச் சென்றான். கிழவனும் வேறு பக்கம் போனான்.

இவ்வளவையும் கண்ணும் கருத்துமாகக் கவனிக்கத் தவறாத கசட்டுப் பசங்கள் சும்மா இருக்கிறார்களா? வேலையோடு வேலையாக வந்து போனவளையும் கந்தய்யாவையும் மாறி மாறிப் பார்த்தபடி கண்களாலேயே பேசிக் கொண்டார்கள். ஒருவன், ''என்ன, துரைசாமியண்ணே! ராத்திரிக் காவல் பார்க்கிறவனுக்கு இந்நேரத்திலே என்ன வேலை உனக்கு?'' எனக் கேட்டுவிட்டுக் கனுக்கென நகைத்தான்.

மற்றொருவனும் அவனையே நோக்கி, ''அப்படித்தான் வந்தியே, மலைச்சுப்போயி ஏன் நின்னுட்டே? நீ ஒண்டியாவே அவளை எடுத்து முழுங்கிடுவே போல இருக்குதே!'' என்றான்.

மூன்றுமவன், ''தண்ணித் தாகம் நாக்கு வறட்டுதண்ணே!'' என்றான் இடக்குத்தனமாக. அதைத் தொடர்ந்து, கட்டைக் குரல்களின் கேலி நகைப்புக்கள் ஒருமித்து வெளியாயின.

ஒரு வாரமாயிற்று. மேஸ்திரிக் கிழவனின் நேரடிப் பார்வையினால் இருளாயியின் வேலையில் எவ்விதக் குறையும் ஏற்படவில்லை. மரத்துக் கிளைத் தூளியில் அவளது செல்வம் உறங்கிக் கொண்டிருக்க, அவள் வேலைக்குத் தடங்கலுமில்லை. தினசரி இரண்டு ரூபாய் சம்பளத்தில் அவளுக்குத் தண்ணி வழங்கும் வேலை. செலவழிந்தது போக, ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றும் மிச்சமாகி அவளுடைய இடுப்பில் இருந்தது.

கீழ்த் தளத்திலுள்ள கோடி மூன்றும் அறை ஒன்றுக்குத்தான் கதவு பொருத்தப்பட்டிருந்தது. அப்படிக் கதவிருந்தும் பகல் வேளைகளில் அந்த அறை பூட்டப்பட்ட நாளே கிடையாது. அது பெயின்ட், வார்னிஷ் போன்ற விலையுயர்ந்த சாமான்கள் வைப்பதற்கும், கந்தய்யாவின் அன்றாடக் கணக்கு வேலைகள் நடப்பதற்கும் அதுதான் பொருத்தமான அறையாக இருந்தது. சுவரோரத்திலுள்ள ஒரு மேசையும், நாற்காலியும் அவனது உபயோகத்திலிருந்தன. அவனுடைய சட்டை, துணி மணிகள் எல்லாம் கூடச் சுவரின் ஆணியில் தான் கணக்கில் தொங்கும். அவன் அங்கே அமர்ந்திருக்கும்போது யாராவது வந்து வேலை சம்பந்தமாகக் கேட்டுப் போவதுண்டு. அவனும் அடிக்கடி எழுந்து போய் வேலைகளை

# THE NEW INDIA INDUSTRIES LTD.

*Registered Office :* Jetalpur Road, BARODA

*Makers of* 

*Photo Paper*

| | | |
|---|---|---|
| BROVIRA | – | for enlargements |
| LUPEX | – | for contact prints |
| AGFASTAT | – | for documents copying (camera) |
| COPEX | – | for document copying (contact) |

*in collaboration with :*

M/s. AGFA - GEVAERT AKTIENGESELLSCHAFT, LEVERKUSEN, West Germany

*Factory :*
Bombay Agra Road
Mulund, BOMBAY-80

*Bombay Office :*
Industrial Assurance Buildings
Opp. Churchgate Rly. Station, BOMBAY-1

---

# நினைவில் இருக்க வேண்டிய பெயர்




பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

## நெருப்பு – கப்பல் – விபத்து

ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங், மதுரை-1

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, கோரக்பூர்
கோயமுத்தூர், கொச்சி, கோவில்பட்டி


கருத்தைக்
கவரும்


கோயா


விந்தைப்
படைப்பு

மேற்பார்வையிட்டுவிட்டு வந்து அமருவான். அதுவரையில் அந்த அறைக் கதவு சாத்தப் படுவதுமில்லை, பூட்டப்படுவதுமில்லை. அவன் இல்லாத சமயங்களில் அவ்வறைக்குள் போன வர்களுமில்லை.

இப்படி உள்ள பழக்கத்தில் ஒரு நாள் மாலை அவன் வெளியே போய்ச் சுற்றிவிட்டுத் திரும்புகையில், ஒரு பேரிடியான காட்சி அவனுக்குத் தென்பட்டது. சுவரில் மாட்டி வைத்திருந்த அவனுடைய புத்தம் புதிய டெரிலின் சட்டைகளில் இரண்டு, ஜரிகைக் கரை வேட்டியொன்று இவை மூன்றும் போன மாயம் தெரியவில்லை. நல்ல வேளை யாக முதலாளியின் பணம் ரொக்கமாக ஏதும் வைக்கவில்லையாகையால், அந்த நஷ்டம் வேறு இல்லை. ஆனால் இவற்றின் மதிப்பே குறைந்தபட்சமாக என்பது ரூபாயாயிற்றே? இந்த அபூர்வத் திருட்டை யார் மீது சுமத்துவது?

கந்தய்யா உள்ளூறப் பதறினாலும் யாரிட மும் வாய் விட்டுச் சொல்லவில்லை. திருட் டைக் கண்டுபிடிக்க முயன்றான். புலன்கள் எதுவும் கிட்டாமையால் அவனுக்கு இழந் தவை இழந்ததாகவே முடிவாகிவிட்டன. அவற்றை மறக்க வேண்டிய நிலைக்கும் வந்து விட்டான்.

ஒரு நாள் இரவு பதினொரு மணி இருக்கும். வீட்டுப் படுக்கையில் படுத்திருந்த கந்தய்யா உறங்கவில்லை. மறுநாள் முக்கியமாகச் செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றித் திட்டமிட்டுக் கொண்டிருந்தவனுக்குத் திடீரென்று ஒரு நினைப்பு வந்தது. மறுநாள் முதலாளி வரக் கூடிய வாராந்திர நாள். எந்த வேலையில் பிழை இருந்தாலும் முதலாளி பொறுத்துக் கொண்டு விடுவார். ஆனால் சிமெண்ட் பூசின இடங்களுக்குத் தண்ணீர் ஊற்றுவிட்டால் அவருக்குப் பிரமாத கோபம் வந்துவிடும். மூன்று நாட்களாகப் பூசப்பட்டிருந்த நான்கு அறைகளுக்கும் தண்ணீர் ஊற்றினார்களோ இல்லையோ என்கிற சந்தேகம் அவனுக்கு வலுவடைந்தது. சட்டென எழுந்தான். சுவரில் மாட்டியிருந்த சட்டையை எடுத்து அணிந்து கொண்டு கிளம்பிவிட்டான்.

சைக்கிளில் ஏறி அரை மைல் தூரத்தி லுள்ள கட்டிடத்துக்கு வருகையில் பாங்கு மணி பன்னிரண்டு அடித்து விட்டது. கையி லுள்ள டார்ச்சு விளக்கை ஏற்றியபடி வாட்ச் மேன் துரைசாமியைக் கூப்பிட்டான். பல தடவைகள் கூப்பிட்டும் பதில் இல்லை. சைக்கிளைக் கீற்றுக் கொட்டகைக்குள் வைத் துப் பூட்டிவிட்டு, கனவேகமாகக் கட்டிட ஓரம் வந்தான். பன்னிரண்டு அறைகளையும் தாண்டி, கோடி அறைப் பக்கத்தை நெருங் குகையில் யாரோ பேசிக் கொண்டிருப்பது போன்ற ஓசை கேட்டது. சத்தமின்றி நடந்து அறையை நெருங்கினான். வெளிப் புறம் அடைக்கப்பட்டிருந்த கீற்றுச் சார்ப் பின் சன்னமான இடுக்கின் மூலம் உள்ளே யிருக்கும் விளக்கின் ஒளி தெரிந்தது. வியப் புடனே ஊன்றிக் கவனிக்கத் தொடங்கினான்.

அந்த அறையின் ஜன்னல்மீது ஒரு மெழுகு வத்தி விளக்கு எரிந்து கொண்டிருந்தது. கீழ்த் தரையில் விரிக்கப்பட்டிருந்த ஈச்சம் பாய் ஒன்றின் மீது — இருவர்! ஒருத்தி —



''நீங்கள் எழுதின மர்மநாவலுக்குள் எங்கள் அச்சுத் தொழிலாளர்கள் மேலும் ஒரு மர்மத் தைப் புகுத்தியிருக்கிறார்கள்.''

''பலே! என்ன அப்படி?''

''1,57,64,3,102,4,10,60 என்று பக்கங்களைத் தாறுமாறாக வைத்துப் பைண்டு செய்து விட்டாங்க.''

அவளேதான் இருளாயி! அவனுக்குப் பக் கத்தில் அமர்ந்து அவனது தோளின் மீது கைபோட்டுப் பேசியபடி ஒரு கன்னங்கரிய கட்டைத் தடியன்!

கந்தய்யாவின் உள்ளத்தில் அக்காட்சி 'சொரே'லென உணர்த்திற்று. 'அடிப் பாவி! மேஸ்திரிக் கிழவன் சொன்னது சரியாகி விட்டதே! இவ்வளவு பணத்தையும் கொட்டி யிருக்கிற கட்டிட முதலாளிக்குக்கூட இல்லா உரிமையை இந்த மானங் கெட்டவன் எடுத் துக் கொண்டு விட்டானே! இவனுடைய உடல் விற்பனைக்கு இதுவா இடம்?' என்ற எண்ணங்கள் நெஞ்சில் குமுறி எழுந்தன. சட்டெனத் திரும்பி, டார்ச்சு விளக்கின் ஒளியை நாலாபுறங்களிலும் செலுத்திப் பார்வையிட்டான். மனித அரவமே அற்ற படு அமைதி எங்கிலும் காணப்பட்டது. அங்கே கிடந்த சுண்ணும்பு இடிக்கும் உலக்கை யொன்றைக் கையில் எடுத்துக் கொண்டு சரசரவெனக் கீற்று மறைப்புக்குள் நுழைந்து, அறைக்குள் தலையை நீட்டினான்.

அடுத்த கணம் அந்தச் சோடிகளிரண்டும் அரண்டு எழுந்தன.

கை உலக்கையை ஓங்கிக் கீழே தட்டியபடி ''அடேய்! யாரடா நீ?'' என்றான் கூரத்த குரலில். டார்ச் விளக்கின் ஒளியை அவன் முகத்துக்குத் திருப்பினான்.

இருவரிடமிருந்தும் பதிலே இல்லை. சன்னலடியில் துணிக்குள் சுருண்டு கிடந்த குழந்தை மட்டிலும் இரண்டு தடவைகள் தும்மிவிட்டது.

''ஏ கழுதை! மானங்கெட்ட கழுதை! உன்னைச் சிபாரிசு பண்ணி வேலைக்குச் சேர்த் தேன் பாரு, நான்தான் முட்டாள்!''

இருளாயி கைகளை ஆட்டியபடி பதறிக் கூவினாள். ''ஐயையோ! எசமான்களே, அப் படியெல்லாம் வேணாங்க — இவரு — இவரு என் புருஷன் தானுங்க!''

''தூ! மானங்கெட்டவளே! பித்தலாட்டமா சொல்றே?''

''இல்லீங்க – இல்லீங்க! சத்தியமா இவரு என் புருஷனேதாங்க!''

''உண்ட வீட்டுக்கு ரெண்டகம் நினைக்கிறாப்போலே, உன் அயோக்கியத்தனத்துக்கு இந்தச் சீமான் கட்டிடத்தையா பார்த்தே? வெளியே போங்க நாய்களா! இனிமேப்பட்டு இந்தப் பக்கம் தலை காட்டினியோ உன்னை வெட்டி.... வெட்டிப் போட்டுடுவோம்....உம்! தூக்கு சாமான்களையெல்லாம்!''

இவ்வளவு வார்த்தைகளுக்கும் இடையே அந்தக் கரியவன் தந்திரமாக நழுவியே விட்டான்! ஒரு கண நேரத்துக்குள்ளாக, அந்த அறை காலியாகி விட்டது.

அவர்களை விரட்டின பின்னரும் கந்தய்யாவுக்கு ஆத்திரம் தீரவில்லை. பக்கத்தில் வாட்ச்மேன் துரைசாமி இருந்திருந்தால் இவர்களுக்குத் தலா நாலு போட்டு அனுப்பியிருக்கலாமே என அவன் உள்ளம் பொருமிற்று. வெளிப்புறம் வந்து நின்று விளக்கின் ஒளியைப் பல திசைகளிலும் செலுத்திப் பார்த்தான். அவர்கள் போன சுவடே தெரியவில்லை. பின்னர், வந்த காரியத்தின் நினைப்பு எட்டவே, இரண்டு மூன்று அறைகளை எட்டிப் பார்த்தான். அவைகளில் தண்ணீர் கட்டி யிருந்தது. திரும்பிச் சைக்கிள் இருக்கும் கொட்டகையை நோக்கி வந்து கொண்டிருந்தான். அப்போதுதான் கறுப்புக் கம்பளியால் முக்காடு போட்ட உருவம் ஒன்று சுருட்டுப் புகையை வெளியாக்கியபடி எதிர்ப்பட்டு வந்து கொண்டிருந்தது.

''யாருடா, வீரப்பனா?'' என்றான் கந்தய்யா.

வந்தவன், சிறிதே மிரண்டபடி ''ஆமாங்க. கணக்குப்பிள்ளை ஐயாங்களா?'' என்றான்.

''நீ இங்கே எங்கே வந்தே? வாட்ச்மேன் துரைசாமி எங்கே ஒளிஞ்சு பூட்டான்?'' எனக் கேட்டான் கந்தய்யா.

''நான்தானே மூணு நாளாக் காவல்லே இருக்கிறேனுங்க. துரைசாமி ஆசுபத்திரியிலே கிடக்கிறதுலேருந்து? இப்போத்தான் அதோ அந்தக் குட்டைக் கரைக்குப் போயிட்டு வரேனுங்க – வவுத்து வலி!''

கந்தய்யா வியப்படைந்தான். ''என்னது? துரைசாமி ஆசுபத்திரியிலே இருக்கிறானா? அவனுக்கு உடம்புக்கு என்ன?''

''தெரியாதுங்களா உங்களுக்கு? யாரோ அவனுக்குப் பணம் குடுக்கணுமாம். அதைக் கேட்கிறதுக்குப் போனானாம். வாய்ப் பதட்டமா இவன் ஏதேதோ பேசியிருக்கிறான் போலே யிருக்குது. இரும்புக் கம்பியாலே மண்டையை உடைச்சு அனுப்பிச்சுட்டானும் கடன்காரன்!''

''அடப் பாவமே! அவன் கொஞ்சம் திமிருக்காரன். அவனுக்கு வேண்டியதுதான். அடுத்த மாசம் அவனுக்குக் கண்ணாலம்னு சொன்னாங்களே?'' எனக் கூறிவிட்டு வீரப்பனைக் காவலில் கருத்தாக இருக்கும்படி எச்சரிக்கையிட்டான் கந்தய்யா.

இருளாயி வேலையை விட்டுப் போன காரணம் ஒருவருக்குமே தெரியவில்லை. கந்தய்யா அதை ஒருவரிடமும் வெளியிடவுமில்லை.

ஒரு வாரத்துக்குப் பின், முதலாளியின் கட்டளைப்படி கந்தையா பக்கத்து நகரத்துக்குச் சைக்கிளில் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தான். அந்தி நேரத்தில், இலேசான இருள் படிந்த சமயம். சந்தடியற்ற சாலையின் வழியே வந்துகொண்டிருந்தவன், ஊர் எல்லையிலிருந்த ஒரு சிறிய ஓட்டுக் கட்டிடத்தை அணுகிக் கொண்டிருந்தான். அது ஆடு, மாடுகளைச் சிறையாக அடைத்து வைக்கும் பட்டி. அக்கட்டிடத்தின் நீண்ட திண்ணைப்புறத்துக் கோடியில் சாக்குப் படுதா ஒன்று மறைவுக்குக் கட்டப்பட்டிருந்தது. ஓட்டுக்கு மேலே எழும்பிக் கொண்டிருந்த புகையும், அடுப்பில் கொதித்துக்கொண்டிருந்த மசாலைக் குழம்பின் நெடியும் அவனது கவனத்தை ஈர்த்தன. சற்றே திரும்பிக் கண்ணோட்டம் விடுத்தான். திண்ணைச் சுவரோரத்திலிருந்த கயிற்றுக் கொடியில் அவனது பார்வை பதியவும் ஒரு கணம் அதிர்ச்சியே அடைந்து விட்டான். வியப்புடன் சைக்கிளை விட்டு இறங்கி, ஊன்றிப் பார்த்தான். சந்தேகமே யில்லை. அவன் பதினைந்து நாட்களுக்கு முன் இழந்திருந்த நீல நிற டெரினின் சட்டை; பச்சை நிறச் சட்டை; ஜரிகை வேஷ்டி – மூன்றுமே அந்தக் கொடியில் காட்சி யளித்தன.

கந்தய்யாவுக்கு ஏற்பட்ட வியப்பின் படபடப்பு அடங்கச் சிறிது நேரமாயிற்று. அதைத் தொடர்ந்து தீவிரமான வேகமும் குமைந்தது. அப்படியே சைக்கிளில் திரும்பிப் போய், போலீஸ் உதவியுடன் மீண்டும் வரலாமென்று ஒரு கணம் சிந்தித்தான். மறுகணம் யோசித்தான். உண்மையை இன்னும் கொஞ்சம் அறிந்து கொண்டு போவது நல்லது என்ற எண்ணமும் குறுக்கிட்டது. அந்த ஆர்வம் மேலிடவே, சந்தடியில்லாமல் நடந்து போய், சைக்கிளைச் சாலை ஓரத்து மரத்தடியில் நிறுத்தினான். கால் செருப்புகளையும் அங்கேயே உதறிவிட்டுத் திரும்பினான். காலோசை கூட வெளியாகாமல் நடந்து வந்து சுவர் ஓரத்தில் ஒண்டிச் செவிகளை மடுத்தான்.

அங்கே கலவரமான வாக்குவாதங்கள் நடந்து கொண்டிருந்தன.

பெண் குரல் படபடத்தது. ஆண் குரல் ஆணவத்தைக் கொட்டி ஆர்ப்பரித்தது. அந்த முதல் குரலைக் காதால் கேட்ட கணமே கந்தய்யாவுக்கு எல்லாம் புரிந்துவிட்டது. பழக்கப்பட்ட குரல் – காலிலே விழுந்து கும்பிட்டு, கல் மனமும் கரையப் பேசி வேலை தேடிக் கொண்டதே, அதே சிவப்புத் தோல் சிறுக்கியின் குரல்தான் அது! உடலையும் உள்ளத்தையும் விலைக்கு விற்ற வியாபாரக் கட்டை!

மற்றது–?

கந்தய்யாவின் செவிகள் விரிந்தன.

''நீ ஒவ்வொரு காரியமாச் செய்துகிட்டு வர்றே? இவ்வளவு பெரிய உலகத்துலே, நாணயமா, நம்பிக்கையா, கையை ஊனிச்சுத்தான் வாளணும்கிறதை மட்டிலும் நீ உணரலியே பாரு? நீயும் கெட்டே; என்னையும் கெடுத்துட்டே. இம்புட்டுத்தானே?'' பெண் குரல் புலம்பிற்று.

உங்களைப் போன்ற உற்சாகம் மிக்கவர்களின் முதல் தேர்வாக பிஎஸ்ஏ இருப்பது இயல்புதான்.

பிஎஸ்ஏ எழில் மிக்க சைக்கிள். இலேசானது ஆயினும் வலுவுள்ளது எளிதாக ஓட்டுவதற்கேற்ற லாகவமும் அமைப்பும் கொண்டது.

பிஎஸ்ஏயில் பல இடங்களுக்கும் குஷியாகச் செல்லுங்கள்

உலகில் இப் பகுதியில் சிறந்த சைக்கிள் தயாரிப்பாளர்களால் பிஎஸ்ஏ அதன் புகழ் பெற்ற உயர் தரத்திற்கேற்ப தயாரிக்கப்படுகிறது.

**BSA**®

பிஎஸ்ஏ மிகச் சிறந்த சைக்கிள்







® பிஎஸ்ஏ சைக்கிள்ஸ் லிமிடெட் யு.கே. அவர்களின் பதிவு பெற்ற டிரேட் மார்க்
இந்தியாவில் தயாரிப்போர் : டியூ சைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ்-53
உரிமையாளர்கள் : டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்-1
பதிவு பெற்ற உபயோகிப்போர்

''அட சரித்தான் போன்றேன்! நீ எனக்குப் புத்தி சொல்லவா இருக்கிறே?''—ஆண் குரல் கடுத்தது.

''பின்னே எதுக்கு இருக்கிறேன்? நானு சொல்லாமே யாருதான் சொல்றதுன்றேன்? இதோ ஏணையிலே தூங்குதே இது வந்து சொல்லனும்கிறியா?''

''த—த! இப்போ என்ன தப்பை என்கிட்டே கண்டு பிடிச்சுட்டே? இப்படிக் கெடந்து கூத்தாடுறே? சாமி நுழைக்கிற மாதிரி?''

''ஊ..ம்? இன்னிக்கு நேத்தா? வருசம் இரண்டாயிடுச்சு! என்னைக்கி நீ என்னை ஏமாத்திக் கெடுத்தியோ அன்னியிலேருந்து ஒருநாளாவது ஒளுங்கு உண்டா உன்கிட்டே? போனதெல்லாம் போவட்டும்; இனிமேயாச்சும் எங்கியாச்சும் குந்திக்கிட; நானு உழைச்சுக்கிட்டு வந்து உனக்குப் போட்டேன்னு சொல்லிக் கையடிச்சுக் குடுத்தேனே, கேட்டியா நீ? அங்கே — பிழைக்கிற இடத்துக்கும் வந்து என் பாவத்திலே கையை வைச்சுட்டே! பனி பாவத்துக்கு இரக்கப்பட்டு வேலை கொடுத்த புண்ணியவான் தலையிலேயே கையை வைச்சுட்டு வந்திருக்கிறியே, இது நாயமா? அவருடைய சட்டைத் துணி மணியெல்லாத்தியும் சத்தப் படாமே சுருட்டிக்கிட்டு வரக் கொண்டுதானே, உனக்குக் குத்தமுள்ள நெஞ்சு 'குறுகுறு'ன்னு கொட்டியிருக்குது? நான்தான் இவன் புருஷன்னு சொல்றதுக்குத் தைரியம் இருந்திச்சா உனக்கு? போலீசுக்காரன் பேரைச் சொல்லாங்காட்டியும் யமனைக் கண்ட மாதிரி வெளியே ஓடிட்டே?''

கந்தய்யாவின் உள்ளத்தில், இந்தப் புதுமைச் செய்திகள் 'சுரீ'லெனப் பாய்ந்து பதிந்தன. வியப்பு ஒரு பக்கம், கனிவிரக்கம் ஒரு பக்கம், வெடிப்பு ஒரு பக்கம் — மூவகை உணர்ச்சிகளும் மாறி மாறிப் புரண்டன. 'அடப் படுபாவி! அவனேதானு இவன்?' என வாய்க்குள்ளாகவே சொல்லிக்கொண்டான் ஒரு முறை.

அவளுடைய வார்த்தைகள் தொடர்ந்துகொண்டிருந்தன: ''என்னமோ, என்னைப் புடிச்ச நல்ல காலம் ஒருத்தருக்கும் என் பேரிலே சந்தேகம் விளல்லே. அம்பது ரூவா சட்டையை அஞ்சு ரூபாய்க்கி விக்கிறதுக்குப் பார்த்தியே. உன் திருட்டு வெளியாவறதுக்கு எத்தினி நாழியாகுன்றேன்? மருவாதையா நான் சொன்னபடி கேளு. இப்பவே அந்தச் சட்டை, வேட்டியெல்லாம் என்கிட்டக் குடுத்துடு. நாளைக்கிக் கருக்கல்லே நானே எடுத்துப் போயி அந்தப் புண்ணியவான் காலிலே விழுந்து, ஏதோ நானே தெரியாத்தனமா திருடிட்டேன்னு சொல்லிக் கெஞ்சி மன்னுப்புக் கேட்டுக்கிறேன். அதுதான் முறை!''

ஆண் குரல் சீறிற்று: ''த—த! நீ என்னடி தீர்ப்புப் பண்றே? நானும் நாலு நாளியாப் பார்க்கிறேன் — என்னமோ பதவிசு படிக்கிறே — பத்தினி கணக்காப் படபடக்குறே? முறையைக் கண்டுட்டியோ முறையை? நானு இங்கிட்டு இருக்கிறவன் ஆம்புள்ளைங்கிறதையே மறந்துட்டியோ?''

''நீ ஆம்புள்ளைதான். இல்லேன்னு யார் சொல்லுவாங்க? எனக்குத்தான் ஊர், உல



''தாத்தா, பள்ளிக்கூடம் லீவ் விட்டாச்சே!''

''அதை நீ சொல்லித்தான் தெரிஞ்சுக்கணுமா? உன் உடம்பே சொல்லுதே!''

கத்தைப் போல கட்டினவன்னு சொல்லிக்கிடறதுக்கு ரோக்கிதையில்லே!''

''ஏன்? அதுக்கு வேணுமானு, எவனுவது சிவப்புத் தோலா இருக்கிறவனைக் காட்டிச் சொல்லிக்கிடேன்!''

அடுத்த கணம் பெண் குரல் புலியாக உரத்து உறுமிற்று: ''த-த! என்ன சொன்னே? இன்னொரு வாட்டி இப்பிடிச் சொன்னியானல் அப்புறம் தெரியுமா சேதி? உன் நாக்கு அழுகிப் பூடும். உன் புள்ளே மேலே ஆணையாச் சொல்றேன். — உட்டேன் — உட்டேன். சிவப்புத் தோலோட பல்லை இளிச்சுக்கிட்டு வந்தவன் கதிதான் ஆசுபத்திரியிலே கிடக்கிறானே! இரும்புக் கம்பியாலே மூஞ்சி மொகரையை ஒடச்சு அனுப்பிச்சிருக்கேன்! நீ போயின்னாலும் விசாரிச்சுக்க!''

அடுத்தகணம்—ஆண்குரல் அடிபணிந்தது!

நின்று கொண்டிருந்த கந்தய்யா,— நெருப்பை மிதித்தவன் போன்று துள்ளிக் குதித்தான். அவனுக்கு எல்லாம் புரிந்து விட்டது!

'பெண் வர்க்கம் முழுவதையுமே நெறியை நீக்கி விட்டுக் காணும் மிருகமாக ஒரு துரைசாமி இருக்கும் வரையில், இருளாயியைப் போன்ற கொள்ளிக் கட்டையொன்றும் இந்த உலகில் இருந்தே ஆக வேண்டும்!' கணக்குப் பின்னே கந்தய்யாவின் உள்ளத்தில் இவ்வெண்ணங்கள் தடம் புரண்டு முழக்கின. சட்டென நடுச் சாலைக்குத் திரும்பினான். அக்கட்டடத்தின் திசையைப் பார்த்தவாறு, 'இருளாயி! நீ வாழ வேண்டும்; நீ வாழ்வதற்காகவே உன் புருசன் என்கிற போக்கிரியையும் வாழ விடுகிறேன்' என மெல்லிய குரலில் கூறிவிட்டு, சைக்கிளில் ஏறி அமர்ந்து விட்டான்.

# கால்பந்தும் சில எழுத்தும்

(இன்பமணி)



இரண்டாம் உலகப் போரின்போது பிரிட்டிஷ் ராணுவத்தினர் ஒரு தடவை கடுமையான சண்டைக்குப் பிறகு ஓர் இடத்தைக் கைப்பற்றினர். அத்தனை சிரமப்பட்டுக் கைப்பற்றிய அந்த இடத்தை ஒரு நோட்டம் விட்டபோது அவர்களுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. 'ஆஹா! இது நாம் கால்பந்தாட்டம் ஆட உகந்த இடம்!' என்று குதூகலித்தனர். வெற்றிக் களைப்பு தீருமுன்னரே அந்த இடத்தைக் கால்பந்தாட்ட மைதானமாக்கி ஆடிய பிறகுதான் அவர்களுக்குக் களிப்புடன் தூக்கம் வந்ததாம்!

அந்நாட்களில் ஆங்கிலேயர்களின் கால்பந்தாட்டம் முரட்டுத்தனமாக இருந்தது. இதைக் கண்டு பிரஞ்சுக்காரர் ஒருவர், "ஆமாம்! இதை இங்கிலீஷ்காரர்களின் விளையாட்டு என்று சொல்லும் சண்டை என்பதற்கு அவர்கள் என்ன விளக்கம் தருவார்களோ?" என்று வியந்தாராம்!

ஃ ஃ ஃ

இத்தகைய மகிமை வாய்ந்த கால்பந்தாட்டம் நேரு ஸ்டேடியத்தில் மைதானத்தின் எல்லையில் முள்வேலி வளைக்கப்பட்டு, அதனுள் பாதுகாப்பாக நடைபெற்றது!

"கால் பந்தாட்டக்காரர்களுக்கு இந்த எல்லைப் பாதுகாப்பு எதற்கு?"

"இல்லை, ஸார்! எல்லைப் பாதுகாப்பு ஆட்டக்காரர்கள் அடுத்தவர்களல்லவா? அதனால் இந்த ஏற்பாடு இருக்கும்!" என்று கூறிய ஒரு பழம் பெருச்சாளி ரஸிகர் 'பாதுகாப்பு பலமாயிருந்தாலும் தாக்காமல் விடமாட்டேன்' என்பது போல் சாத்துக்குடிப் பழங்களை உற்சாகத்துடன் மைதானத்தில் வீசி எறிந்தார்!

---

மேலிருந்து: ரெபரி கன்னியப்பன், காப்டன் பூபேந்திர சிங், மைக் அறிவிப்பாளர்கள் இருவருக்கிடையில் கால்பந்தாட்ட உற்சாகியான ஒரு சிறுவன். கோப்பையுடன் நிற்பவர் பாலக் காப்டன்.

''என்ன ஸார்! கால்பந்தாட்டத்தில் பதினொரு ஆட்டக்காரர்கள் தானே? பன்னிரண்டாவது ஆசாமி யாரு ?''

''அவரா? வக்கீல். ரெபரி எடுக்கும் முடிவுகளையெல்லாம் எதிர்த்து வாதாட அமர்த்தி யிருக்கிறார்கள் போலிருக்கிறது !''

''ஸார் ! அவரு 'கோச்'. ரெபரி தவருன முடிவு எடுத்தால் 'வசை'மாரி பொழிந்து தள்ள நமது ரசிகர்கள் இருக்கிறார்களே, வக்கீல் எதற்கு?'' என்று விளக்கினார் ஒரு கால்பந்தாட்ட ரஸிகர்.

''ஸார் ! அதோ ஜாலரா தட்டுகிறாரே பாலாஜி ! அவர் எம காதகர் ! அவர் வாயில் ரெபரி படும் பாடு....!''

''ஓய், இரையாதேயும்! உம்மையும் அவர் வசைமாரி பொழிந்து விடப் போகிறார், ஜாக்கிரதை !''

ஃ ஃ ஃ

கால் பந்தாட்டத்தைக் காண வந்த ரஸிகர்களில் நாகேஷும் ஒருவர் ! அவர் வந்து அமர்ந்த நாற்காலி ஒடிந்த நாற்காலியான தால் சரிந்தது. அதைக் கண்டதும் ரஸிகர்களின் சிரிப்பொலி எழுந்தது.

''இந்த நாற்காலி நம்ம 'கோல்' மாதிரியே இருக்குதே !'' என்று அங்கலாய்த்தார் நாகேஷ். கால்பந்தாட்டப் பந்தயத்தில் சிரிப்பு நடிகர் நாகேஷிடம் கால் ஒடிந்த நாற்காலியும் ஆடிவிட்டது !

ஃ ஃ ஃ

மைக்கில் ஒலிபரப்பாளர் முழங்கினார். ''இன்று தலைமை வகிப்பவர் முன்னாள் மந்திரி திரு சி. சுப்பிரமணியம். கால் பந்தாட்டத்துக்குத் தமாஷா வரி நீக்கியவர் இவரே. இல்லாவிட்டால்

மேலிருந்து : ரஸிகர்களிடையே பாலாஜி, கோல்கீப்பர் பாந்தியா, புசேனா, நாகேஷ், தலைவர் விட்டல்.





நீங்கள் இன்னும் கூடுதல் கட்டணம் செலுத்த வேண்டி யிருந்திருக்கும்!''

இதற்குக் கால்பந்தாட்ட ரஸிகர்களிடமிருந்து எந்தவித உற்சாகக் கைதட்டலோ, பாராட்டோ கிடைக்கவில்லை! வரிமன்னர் மொரார்ஜிபாய் கோஷ்டியைச் சேர்ந்த திரு வி. எஸ்.ஷாக்கு எப்படிக் கரகோஷ ஆரவாரம் கிடைக்கும்?

ஃ ஃ ஃ

''இந்தக் கால்பந்தாட்டப் போட்டியிலே நிறைய அதிசயங்கள் நிகழ்ந்து விட்டன!''

''என்ன? என்ன? என்ன?''

''கால் பந்தாட்டத்திலே மோகன் பாகன் கிளப் பிரசித்தி பெற்றது. அந்த நல்ல ஆட்டக்காரர்களை எல்லைப் பாதுகாப்புப் படை கோஷ்டியினர் வென்றது பெரிய அதிசயம்! இந்த எல்லைப் பாதுகாப்புப் படையினரை ரிஸர்வ் பாங்கி ஆட்டக்காரர்கள் வென்று மற்றோர் அதிசயத்தை உண்டாக்கினர்!''

''ஆஹா! லோக்கல் கோஷ்டி ரிஸர்வ் பாங்கி இறுதியாட்டத்துக்கு வந்து விட்டதில் சந்தோஷம்!''

''உம்ம சந்தோஷத்தை உடைப்பிலே கொண்டு போடும்! கால் பந்தாட்டமானாலும் நல்ல எழுத்து சரியாக இருக்கணும் ஐயா! இறுதியாட்டத்துக்கு மபத்லால் கோஷ்டியினர் வந்திருக்கின்றனர். காப்டன் பூபேந்தர்சிங் அசகாய சூரர்.''

''ரிஸர்வ் பாங்கி ஆட்டக்காரர்கள் அணைப்பட்ட எல்லைப் பாதுகாப்பு கோஷ்டியைத் தோல்வியடையச் செய்தவர்கள். அவர்கள் இலேசில் விட்டுவிடமாட்டார்கள்!''

''செவ்வாயன்று இறுதியாட்டத்தில் முடிவு தெரிந்து விடுகிறது. அதற்குள் நீங்கள் ஏன் வீணாக வாய்ச் சிலம்பமாடுகிறீர்கள்?''

ஃ ஃ ஃ

நேரு ஸ்டேடியம் இறுதி ஆட்டத்தன்று நிரம்பி வழிந்தது. ஜாலராக்கள் முழங்கின. போலீஸ் வாத்தியக் குழுவினர் இசை முழங்கி முள்வேலி சூழ்ந்த மைதானத்துக்குள் ராணுவ நடை போட்டனர்.

ஒலிபரப்புக் கருவியில் தமிழில் விளக்கம் செய்தவர், ''எல்லைப் பாதுகாப்புப் படையினரைப் புறமுதுகிட்டு ஓடச் செய்த ரி ஸ ர் வ் பாங்கிக் குழுவினரும், தென் மத்திய ரயில்வே கோஷ்டியை வென்று புகழ்பெற்ற மபத்லால் குழுவினரும் இறுதி ஆட்டத்தில் கலந்து கொள்ளும் நன்னாள். விளையாட்டுக் கலையில் ஈடுபாடு மிக்க நாவலர் நெடுஞ்செழியன் தலைமை தாங்கிச் சிறப்பிக்கும் பொன்னாள். ரஸிகர்களின் கண்களுக்கு விருந்தளிக்கும் கடைசிநாள்'' என்று முழக்கினார். ஆடுவது புட்பால் ஆனாலும் ஆளுவோர் தி. மு. க. என்பது புரிந்தது.

மபத்லால் துணியைப் போலவே ஆட்டக்காரர்களும் பளிச்சென்று விளங்கினார்கள். காப்டன் பூபேந்திர சிங்கும் டிஸௌசாவும் பந்து கிடைத்தால் 'கோலை' நோக்கிப் பறந்தார்கள். இரண்டு கோல் காப்டன் பூபேந்தர் சிங் போட்டு வெற்றியை நிலைநாட்டினார். முதல் கோல் விழுந்ததுமே ரிஸர்வ் பாங்கி ஆட்டக்காரர்கள் தளர்ந்து விட்டார்கள். அவர்கள் துரதிர்ஷ்டம் அவர்கள் அடித்த 'கோல்' எல்லாம் 'அவுட்'டாகித் தொலைந்தது. மூன்று பேர் சேர்ந்தே தூக்க வேண்டிய ஷீல்டை மபத்லால் கோஷ்டியினர் அநாயாசமாக அடைந்துவிட்டனர்.

ரிஸர்வ்பாங்கி கோஷ்டியினர் இந்த வருஷம் 'ரன்னர்' ஆயினர். விரைவில் 'வின்னர்' ஆவதற்கு அவர்களுக்கு உற்சாகத்தை ரிஸர்வ் பாங்கி கட்டுப்பாடின்றி வழங்கட்டும்!

இந்தியாவில் உள்ள நல்ல கால்பந்தாட்டக்காரர்களின் ஆட்டத்தைச் சுமார் ஒரு மாத காலத்துக்குக் காண வாய்ப்பளித்த தலைவர் விட்டலுக்கும், அவரது சகாக்களுக்கும் ரஸிகர்களின் பாராட்டுதல் கூடை கூடையாகக் கிடைத்தது. அத்துடன் வேர்க்கடலை சுற்றிய தாளும், ஆரஞ்சுப் பழத் தோலும் ஒரு பத்து கூடையாவது தேறியிருக்கும்!

## இயந்திரக் கொத்தனார்!

கொத்தனார்களுக்குப் போட்டியாக ஓர் இயந்திரம் முளைத்திருக்கிறது. 24 கொத்தனார்கள் செய்கிற வேலையை இந்த இயந்திரம் செய்துவிடும். ஆட்டோ ஜண்டன் என்னும் ஜெர்மன் மெக்கானிக், தமது ஓய்வு நேரத்தில் இந்த இயந்திரத்தை உருவாக்கியுள்ளார். இதனை உருவாக்க 14 ஆண்டுகள் பிடித்தன. ஒரு மணி நேரத்துக்கு 3000 செங்கல்களை அடுக்கி, கண்ணாம்பு, சிமெண்ட் கலவையும் பூசிவிடுகிறது. நேர்ச் சுவர்கள் மட்டுமின்றி, சுவர்முனைகள், உள்வளைவுகள், புகைபோக்கிகள் ஆகியவற்றையும் செங்கல்களை அடுக்கிக் கட்டும் ஆற்றல் வாய்ந்தது இந்த இயந்திரம். மாடிக் கட்டிடங்களில் தளம் போடவும் இந்த இயந்திரம் பயன்படும். இந்த இயந்திரத்தைப் பயன்படுத்தினால், கட்டிடச் செலவு 30 சத விகிதம் குறையும் என எதிர்பார்க்கப்படுகிறது. (யூ. பி. எஸ்.)



WS-109

**Myers**

OR

# Wasp

# PUMPS FOR EVERY PURPOSE









A wide range of pumps for every purpose, sturdily built and designed for optimum efficiency, by experts with an enviable background of over a hundred years' experience in manufacturing every type of pump —hand, power, pressure, turbine, centrifugal, rotary, etc. Also available pumps for pumping oil, chemicals, milk or fruit juices!

For your requirements, please contact:

**WATER SUPPLY SPECIALISTS PVT. LTD.**

Bombay-1, P. B. 684 • Calcutta-1, P. B. 424 • Madras-1, P.B. 1707 • New Delhi-1, 4E/13 Jhandewalan Extn., Secunderabad (A.P.) 2670/74, Ghasmandy Rd.



1920 ஏப்ரல் மாதம் கவியரசர் ரவீந்திர நாத் டாகூர் தம் சாந்திநிகேதன நடனக் கோஷ்டியினருடன் சென்னை வந்திருந்தார். வி. பி. ஹாலில் அவருடைய நாடகங்கள் சில நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. அப்போதெல்லாம் நாடகங்களில் பெண்கள் நடிப்பது வழக்கமில்லை. பெண் வேடத்தையும் ஆண்களேதான் ஏற்று நடிப்பது வழக்கம். டாகூர் நாடகக் கோஷ்டியில் ஆண் பெண் நடிகர்கள் இருந்தனர்.

நாடகம் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது பெண்கள் மேடையில் நடிப்பதை ஆட்சேபித்துக் கண்டனக் குரல்கள் கிளம்பின. இதைக் கண்ட டாகூரே மேடையில் பிரசன்ன மானார். கலை உலகம் ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொதுவானது என்றும் ஒருசிலர் கூக்குரலிடுகிறார்களே என்று தம் நாடகத்தில் மாறுதல் எதுவும் செய்ய முடியாதென்றும் பார்க்க இஷ்டமில்லாதவர்கள் வெளியேறி விடலாம் என்றும் கூறினார்.

பரத நாட்டியம் குடும்பப் பெண்கள் ஆடலாகாது என்பது அக்காலத்தவர் கருத்து. மகாகனம் சாஸ்திரியார், சர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் போன்றவர்கள் நடனக் கச்சேரிகளைப் பார்ப்பதில்லை என்றுகூடத் தீவிரமாக இருந்தனர். இந்தச் சமயத்தில்தான் ஸ்ரீமதி ருக்மிணி தேவி எல்லா எதிர்ப்புகளையும் சமாளித்துப் பரதத்தைத் தாமே கற்று அதற்குப் புத்துயிர் அளித்தார்.

**நினைவிருக்கிறதா?**

# "அப்படி ஒரு காலம்

## கத்தியின்றி ரத்தமின்றி ஒரு யுத்தம்

1930 ஏப்ரல் 13 விடியற்காலை ராஜாஜி தலைமையில் நூறு தொண்டர்கள் திருச்சியிலிருந்து வேதாரண்யத்திற்கு (உப்பு எடுக்க) யாத்திரை கிளம்பினர். டி. எஸ். எஸ். ராஜன் பங்களாவில் பிரார்த்தனை நடைபெற்றது. சகலமத பிரார்த்தனைக்குப் பிறகு ரகுபதி ராகவ ராஜாராம் பாடப் பட்டது. சிவகுருநாதன் என்கிற யாழ்ப்பாணத் தொண்டர் சங்கு ஊதினார். பாத யாத்திரை ஆரம்பமாகியது.

இந்தத் தொண்டர்ப் படையை நசுக்கியே விடுவது என்று வீராப்புடன் இருந்தார் தஞ்சை கலெக்டர் தார்ன் துரை. இவர்களுக்கு வரவேற்பு கூடாது. குடிக்கத் தண்ணீர் கூடத் தரலாகாது என்று மக்களை எச்சரித்திருந்தார். ஆனால் தொண்டர் படைக்கு மக்கள் அமோக வரவேற்பளித்தனர். வேதாரண்யத்தில் ராஜாஜி விடியற்காலையிலேயே எழுந்து உப்பு எடுத்ததுதான் தாமதம், போலீஸார் அவரைக் கைது செய்தனர். ராஜாஜி பெல்லாரி சிறைக்கு அழைத்துச் செல்லப் பட்டார். இவரைத் தொடர்ந்து சந்தானம், மட்டப்பாறை வெங்கடராமய்யர், கே. எஸ். சுப்பிரமணியம், இராமச் சந்திரன் ஆகியவர்கள் ஒருவர்பின் ஒருவராக இயக்கத்துக்குத் தலைமைவகித்துக் கைது செய்யப்பட்டார்கள். இந்த இயக்கம் காந்தி — இர்வின் உடன்பாட்டில் கொண்டுவந்து விட்டது.

இந்த யாத்திரைக்காகவே நாமக்கல் ராமலிங்கம் பிள்ளை 'கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது' என்ற பாடலை இயற்றினார்.



# வட்டமேஜை

- ரா. கி. தனைத் தருக!
- லால்குடிக்கு ஒரு சபாஷ்!
- ரொம்ப நன்னாச் சொல்லி இருக்கான்!

சில திங்களுக்கு முன்புதான் எங்களூர் நூலகத்தில் சிவகாமியின் சபதம் கிடைத்தது. அதைப் பெற நான் பட்டபாடு அப்பப்பா! அது எனக்கல்லவா தெரியும்! அந்த நூல், நூலகத்தில் தங்குவதேயில்லை. யார் வைத்திருக்கிறார்கள் என்று நூலகரிடம் கேட்டு அங்கே போய்த் தொந்தரவு செய்து அவர்கள் திருப்பிக் கொடுக்கும்போது உடனே போய்ப் பதிவு செய்ய வேண்டும். அதற்குள் எத்தனை பேர் போட்டி? நிற்க, அது மிக அற்புதமாக அழகிய நடையில் இருந்தது. இப்போது என் பசியினைத் தீர்க்கும் அமுதசுரபி தங்களிடமுள்ளது. தாங்கள் கல்கி அவர்கள் எழுதிய எட்டிக்குப் போட்டி, சாரதையின் தந்திரம், கள்வனின் காதலி, தியாகபூமி, அலையோசை, மகுடபதி, பாரதி பிறந்தார், சங்கீத யோகம், பார்த்திபன் கனவு, சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வன் முதலியவைகளை மீண்டும் வெளியிட வேண்டுகிறேன்.

கண்டனூர்
8–5–68 மெ. மெய்யப்பன்

அவனியிலே நீயன்றோ நாட்டுக்கா க
அனுதினம் தன்னலமே கருதிடாம ல்
ஆன்றோர்கள் தருகின்ற பொருளைத்தாங் கி
சான்றோனாய் எனைஆக்க வருகின்றா யே
ராஜாஜி கருத்துக்கள் தருகின்றாய் நீ
நடமாடும் தெய்வத்தை மறந்திடா த
நல்லவனாய் நானிருக்க நெஞ்சில்நி ரு
நாடெல்லாம் போற்றிடவே எங்கும்செல் க
கல்கியைப்போல் தொண்டுசெய எடுநீ ரா
கதை,கவிதையை அமுதப் படையல்ஆக் கி
தாஇனத்தமிழரெலாம் உனையே வாழ்த் த
தந்தாலே வணங்கிடுவோம் என்றும்உன் னை

சண்முகநாதபுரம்
8–5–68 க. காயாம்பூதேவி

**இவர்களைப் போன்ற எண்ணற்ற கல்கி நேயர்களுக்கு அளவில்லாத ஆனந்தம் தரும் செய்தியை அறிவிப்பதில் மிகுந்த பெருமிதமும் மகிழ்ச்சியும் அடைகிறோம். அமரர் கல்கி அவர்களின் மகோன்னதமான வரலாற்று நவீனம் ''பொன்னியின் செல்வன்'' விரைவிலேயே கல்கியில் மீண்டும் தொடர்ந்து பிரசுரமாக விருக்கிறது என்ற நற்செய்தியே அது!**

— ஆசிரியர்

சென்ற 4–5–68 சனிக்கிழமை இரவு அகில பாரத சங்கீத நிகழ்ச்சியில் ஒலிபரப்பான லால்குடி திரு ஜெயராமன் அவர்களின் வயலின் கச்சேரியைக் கேட்கத் தவறியவர்கள் துரதிர்ஷ்டசாலிகளே.

இரண்டாவதாக வாசித்த சாரங்கா ராக ஆலாபனை சிறிய அளவில் இருந்தாலும், அந்த ராகத்தின் சிறப்பை, நெஞ்சை உருக்கும் தன்மையைக் கேட்க முடிந்தது. அடுத்து மற்றொரு தியாகராஜ கீர்த்தனை கல்யாண வசந்த ராகத்தில் வாசித்துவிட்டு நீண்டநேர ஆலாபனைக்கு நாட்டைக் குறிஞ்சி ராகத்தை எடுத்துக் கொண்டார். ஏதோ ஓர் உலகில் — நமக்குப் புதிதான ஒரு சூழ்நிலையில் சஞ்சாரம் செய்யத் தொடங்கினோம்...... தெய்விக ஒலி காதுகளின் துணை கொண்டு மனத்தை நிரப்பியது. ஒவ்வொரு கட்டத்திலும் ராகத்தின் சிறப்பை உணர முடிந்தது. எந்த ஸ்தாயியில் வாசிக்கும் பொழுதும் எவ்வித அபஸ்வரமும் நுழையவில்லை. அவ்வளவு ஒரு நிதானம் — ஓர் அழகு — ஓர் இனிமை.

ஆலாபனை முடிந்ததும் நம்மையும் அறியாமல் ''லால்குடியாரே! உமக்கு ஒரு சபாஷ்!'' என்று வாய்விட்டுக் கூறத் தோன்றியது.

தில்லியிலிருந்து ஒலிபரப்பப்படும் அகில பாரத சங்கீத நிகழ்ச்சிகளுக்கு அளிக்கப்படும் நேரம் ஒன்றரை மணிதான். அப்படியிருக்க நிகழ்ச்சியின்போது ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் ஹிந்தியிலும் ஆங்கிலத்திலும் கச்சேரி செய்பவரின் பெயர், முன்பு இசைத்த ராகம், பாட்டு இயற்றியவர், பிறகு வாசிக்கப் போகும் இராகம், பாட்டு இயற்றியவர் — இவைகளைக் கூறிக் கொண்டிருப்பது வானொலி நிலையத்தார் சற்றே அதிக நேரத்தை வீணாக்குகிறார்களோ என்று நினைக்கத் தோன்றுகிறது. கச்சேரியில் மனம் லயித்திருக்கையில் இவை இடையூறுகளாகவும் தோன்றுகின்றன.

சென்னை-44
6–5–68 ''குட்டீன்''

ஆதென கீர்த்தனும்பரத்துல, திருகோமதி சுவாமிநாதன் என்கப்பட்டவான் திட்சிதர் வான் போல 'நீலகிரி எக்ஸ்பிரஸ்'ங்கற படத்திற்கு விமரிசனம் (அல்லது பிரவசனமா) பண்ணிருக்கிறதைப் பார்த்தேன். நம்ப 'சோ' வாகப்பட்டவானோட நடிப்பாகப் பட்டதை ரொம்ப நன்னாச் சொல்லியிருக்கான். தமிழ்ப் படங்களாகப் பட்டதுல, இங்கிலீஷ் படங்களை எப்படிக் காப்பியடிக்கிறாங்கறதை ரொம்பத் திவ்யமாச் சொல்லியிருக்கான். நிஜம்மா 'நீலகிரி எக்ஸ்பிரஸ்'லயே ஏறிப் போய் இந்த வெய்யில் காலத்துக்கு ஊட்டியிலே இருக்காப் பல நான் உணர்ந்தேன்னா எப்படி எழுதியிருக்கான்னு பார்த்துக்கோங்களேன்!

மதுரை–3
3–5–68 டி. ஆர். நடராஜன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

## இளமையின் எழில் ததும்பும் வதனம் பூவிலும் மென்மையான சருமம் பெறுங்கள்!

**...அதற்கு உங்கள் சருமத்தின் இயற்கையான ஈரத் தன்மை மாருமல் பாதுகாப்பது அவசியம்**

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமிலுள்ள பிரத்தியேகக் கலவை 'ஹ்யுமெக்டன்ட்' சருமத்தின் இயற்கையான ஈரத்தை உலராமல் காக்கிறது. இதனுல் பருவகால மாறுதல்களாலோ. தூசு முதலியவற்ருலோ, சருமம் வறட்சியடையாமல் மிருதுவாக இருக்கிறது. துல்லிய வெண்பனி போன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் வதனத்திற்கு இளமை எழிலேயும், மென்மை சோபையையும் அளிக்கும்.

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தனியாகப் பூசிக் கொண்டாலே உங்கள் முகம் பொலிவுடன் விளங்கும். அல்லது முகத்தில் முதலில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தடவி அதன் மேல் பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் ஒரே சீராகப் படிந்து முகம் மாசு மறுவில்லாமல் திகழும்!




**பாண்ட்ஸ்** வானிஷிங் க்ரீம்—உலகத்து அழகிகளின் வதனத்தில் மிளிர்வது

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. யில் இணைக்கப்பட்டது)

P. 6990

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்

தபால் செலவு தனி